## ஸ்ரீ விவேகானந்த வித்யாவன குருகுல உயர்நிலைப்பள்ளி

திருப்பராய்த்துறை-639 115, திருச்சி ஜில்லா.

### குருகுலத்தில் புதிய மாணவர்களைச் சேர்ப்பது சம்பந்தமான அறிக்கை

இந்தப் பள்ளியில் 4ஆம் வகுப்பு முதல் 10ஆம் வகுப்பு வரையிலும் உள்ளன. இதனுடைய தொடர்ச்சி 11, 12 வகுப்புக்கள் மதுரை ஜில்லா, திருவேடகம், விவேகானந்த மேல்நிலைப்பள்ளியில் அமைந்திருக்கின்றன. 8ஆம் வகுப்பிலும் அதற்கு மேலான வகுப்புக்களிலும் புதிய மாணவர்களைச் சேர்ப்பது இல்லை. 4, 5, 6, 7ஆம் வகுப்புக்களில் மட்டும் புதிய மாணவர்கள் சேர்த்துக்கொள்ளப்படுவார்கள். புதிய மாணவர்களைச் சேர்க்க விரும்புவோர் மே மாதம் 30ஆம் தேதி காலை 9 மணிக்குள் மாணவர்களுடன் இங்கு வரவேண்டும். அப்பொழுது மாணவர்களை நேரில் பார்த்து, அவர்களுடைய உடல்நிலை, படிப்பு, வேறு இயல்புகள் இவற்றைப் பரிசோதித்து அவர்களுக்கு இடமளிக்கப்படும். மற்ற நாட்களில் மாணவர்களைச் சேர்ப்பது இல்லை. பரீட்சைகள் மே மாதம் 30ஆம் தேதி காலை 10-00மணி முதல் முற்பகலிலும் பிற்பகலிலும் நடைபெறும். மாணவர்களைச் சேர்த்துக்கொள்வதற்கான முடிவுகள் அன்று மாலையிலும் இரவிலும் ஒவ்வொரு வகுப்பாக அறிவிக்கப்படும். இதற்காக விண்ணப்பத்தாள் எதுவும் எழுதியனுப்ப வேண்டியதில்லை. மாணவனை எடுத்துக்கொள்வதாக அறிவித்தவுடன் பொறுப்புத்தொகை ரூ. 200ம், சாமான்கள் பொருட்டு ரூ. 200ம் ஆக-ரூபாய் 400 முன்பணமாகச் செலுத்த ஆயத்தமாக இருக்கவேண்டும். இங்கு இடம்பெற்ற பிறகு, முன்பு படித்த பள்ளிக்கூடத்திலிருந்து பள்ளிக்கூட மாற்ற சர்டிபிகேட் வாங்கித் தந்தால் போதுமானது. உணவு, உடை, வாடகை, முட்டுவழி மற்றும் எல்லாச் செலவுகளுமாக வகுப்புக்கு ஏற்ப மாதம் ரூ. 180 முதல் ரூ. 200 வரை ஆகும். இலவசமாகவோ குறைந்த செலவிலோ மாணவர்களைச் சேர்த்துக்கொள்வதில்லை. போதனமொழி தமிழ். மேலும் விவரம் வேண்டுவோர், 75 பைசா ஸ்டாம்பு அனுப்பிவைத்து ''வித்யாவன குருகுல சட்டதிட்டங்கள்'' என்னும் சிறு புத்தகத்தைப் பெற்று விவரம் தெரிந்துகொள்ளலாம்.

S. ஈசுவரன்
தலைமை ஆசிரியர்

சித்பவானந்த
தலைவர்

---

### மாணவ மாணவிகளுக்கு விடுதி வசதிகள்

மாணவர்களை மேல்நிலை வகுப்புக்களில் ( 11, 12 ) சேர்ப்பதற்கு :
விவேகானந்த மேல்நிலைப்பள்ளி, திருவேடகம் மேற்கு-624 217, மதுரை மாவட்டம்.

மாணவர்களைக் குருகுலக் கல்லூரியில் சேர்ப்பதற்கு :
விவேகானந்த கல்லூரி, திருவேடகம் மேற்கு-624 217, மதுரை மாவட்டம்.

குழந்தைகளை நர்ஸரியிலும், ஆரம்பப் பள்ளியிலும் (ஆண், பெண்) சேர்ப்பதற்கு:
ஸ்ரீ சாரதா பாலமந்திர், சேலம்-636 007.

மாணவிகளை உயர்நிலைப்பள்ளியில் சேர்ப்பதற்கு :
ஸ்ரீ சாரதா வித்யாலயா, சேலம்-636 004.

மாணவிகளைக் கல்லூரியில் சேர்ப்பதற்கு :
ஸ்ரீ சாரதா கல்லூரி, சேலம்-636 004.

என்னும் விலாசங்களுக்கு எழுதித் தெரிந்துகொள்ளுங்கள்.

முத்தமிழ் ப்பண்ணை
11.4.83

# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை


| சக்கரம் 32 | ருத்ரோத்காரி ஹூ சித்திரை மீ | ஆரம் 4 |
|---|---|---|


பொருளடக்கம் பக்கம்




| | | | | | |
|---|---|---|---|---|---|
| வருட சந்தா : | உள்நாடு | ரூ. 15-00 | வெளிநாடு | ரூ. 35-00 |
| தனி இதழ் | ,, | ரூ. 1-50 | ,, | ரூ. 3-00 |


## அந்தர்யோக விவரங்கள்

**சேலம் ஜில்லா—வனவாசியில் 17—4—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த தவ இல்லம்*
*நேரம் : காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்*

**இராமநாதபுரம் ஜில்லா—சாத்தூரில் 24—4—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: S. H. N. எட்வர்ட் மேல்நிலைப்பள்ளி*
*நேரம் : காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர் : ஸ்ரீமத் சுவாமி சங்கரானந்தர்*

**மதுரை ஜில்லா—மேலூரில் 29—4—83 வெள்ளிக்கிழமை**

*இடம்: சபரிமலை ஐயப்ப சுவாமி பிரார்த்தனை மண்டபம்*
*நேரம் : காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்*

[ தொடர்ச்சி பின்பக்கம் பார்க்க]

## அந்தர்யோக விவரங்கள் (தொடர்ச்சி)

**பெங்களூரில் 1—5—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: கன்டோன்மெண்ட் அஜந்தா டாக்கீஸ் எதிரிலுள்ள ஒடுக்கத்தூர் [சுவாமிகள் மடம்*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**தென்ஆற்காடு ஜில்லா—கண்டாச்சிபுரத்தில் 1—5—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: அரசினர் மேல்நிலைப்பள்ளி*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

**தர்மபுரி ஜில்லா—காவேரிப்பட்டணத்தில் 2—5—83 திங்கட்கிழமை**

*இடம்: தபோவனம்*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்
*உணவு வசதி: நேரில் உணவுச் சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.*

**நீலகிரி ஜில்லா—குன்னூரில் 8—5—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: விநாயகர் கோவில் மண்டபம்*
*நேரம்: காலை 9-30 மணிமுதல் பகல் 12-30 மணிவரை*
*நடத்துபவர்;* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**மதுரை ஜில்லா—பேரையூரில் 8—5—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: அருள்மிகு மேலப்பரங்கிரி சுப்பிரமணிய சுவாமி ஆலயம்*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்
*உணவு வசதி: மதிய உணவுக்கு ரூ.1-50 செலுத்திச் சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.*

**இராமநாதபுரம் ஜில்லா—விருதுநகரில் 8—5—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: சரஸ்வதி அம்மாள் ஞானசபாபதி நாடார் கல்யாண மண்டபம்*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்
*உணவு வசதி: ரூ. 2-50 செலுத்தி மதிய உணவுச் சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.*

**திருச்செங்கோடு தாலுகா—மல்ல சமுத்திரத்தில் 15—5—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: செங்குந்தர் திருமண மண்டபம்*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**கோவை ஜில்லா—அன்னூரில் 15—5—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: ஸ்ரீ ராமகிருஷ்ண ஆச்ரமம்*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

**மதுரை ஜில்லா—கொடுவிலார்பட்டியில் 16—5—83 திங்கட்கிழமை**

*இடம்: அத்வைத ஆனந்த ஆச்ரமம்*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி போதானந்தர்



प्रज्ञानं ब्रह्म

# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

சக்கரம் 32 | ருத்ரோத்காரி ௵ சித்திரை ௴ | ஆரம் 4

## பிரார்த்தனை

अहमात्मा निराकारः सर्वव्यापी स्वभावतः ।
स्वभावनिर्मलः शुद्धः स एवाहं न संशयः ॥

— अवधूतगीता

*அஹமாத்மா நிராகாரஃ ஸர்வவ்யாபீ ஸ்வபாவதஃ ।*
*ஸ்வபாவநிர்மலஃ சுத்தஃ ஸ ஏவாஹம் ந ஸம்சயஃ ॥*

*— அவதூதகீதை*

நான் நிராகாரமான ஆத்மா; இயல்பாகவே எங்கும் நிறைபொருள்; இயல்பாகவே தூயவன்; சுத்தன்; இதைக் குறித்து ஐயமில்லை.

என்னதாவி மேலையாய் ஏர்கொள் ஏழுலகமும்
துன்னி முற்றுமாகி நின்றசோதி ஞானமூர்த்தியாய்
உன்ன தென்னதாவியும் என்னதுன்ன தாவியும்
இன்ன வண்ணமேநின்றாய் என்றுரைக்க வல்லேனே?

*— திருவாய்மொழி*

# அருள் விருந்து



யாண்டும் மகிழ்வுற்றிருப்பது ஆத்ம சாதனம்.

ஓயாது உழைத்து உயர்நிலைக்கு வருபவனே வீரன்.

தன்னை மறந்திருப்பதற்கு நிகரான பண்பாடு இல்லை.

அறநெறி நலனைக் காக்கிறது; தீமையை அகற்றுகிறது.

விவேகி ஒருவன் எப்பொழுதுமே அமைதியுற்றிருக்கிறான்.

தன் மேலான தன்மையினின்று பிசகுபவனுக்கு இருப்பிடம் எங்கே?

நாவடக்கம் பழகுபவனுக்கு ஏனைய அடக்கங்கள் எளிதில் அமைகின்றன.

பிறர் கொள்கைக்கு மதிப்புத் தருதற்கேற்ப மனத்தெளிவு உண்டாகிறது.

உடல் உணர்ச்சியை ஒதுக்கித் தள்ளினாலொழிய பரத்தின் காட்சி வாய்க்காது.

மக்கள் எல்லாரிடத்தும் பொறுப்பு அதிகரிப்பதற்கேற்பக் குடியரசு ஓங்குகிறது.

ஆனந்தத்தில் ஊறியிருக்கிறவன் அதை எல்லார்க்கிடையிலும் வழங்குகிறான்.

தன் கொள்கையே சாலச் சிறந்தது என்று எண்ணுவது அகங்காரத்தின் விளைவு.

தீவிர முயற்சி எடுத்துக்கொள், அமைதியுற்றிரு, தீர்மானத்தில் திண்ணியனாயிரு.

ஆழ்ந்து தியானம் செய்ய வல்லவன் பிறகு எச்செயலையும் நன்கு சாதிக்க வல்லவனாகிறான்.

சமயம் ஒன்று சாதித்துள்ள நலனைக் கருத்தில் வாங்கிக்கொள். தோல்வியைப் பொருட்படுத்தாதே.

விளக்கேற்றி வைத்திருக்குமிடத்தில் இருள் இல்லை. அதே விதத்தில் ஞான விளக்கேற்றி வைத்திருக்குமிடத்தில் அஞ்ஞான இருள் இல்லை.



## பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

பரமஹம்சதேவர் பலராமனுடைய மாளிகைக்கு எழுந்தருளியுள்ளார். ஆங்குப் பக்தர்கள் பலர் கூடியிருந்தனர். அவர்களுக்கிடையில் சிறிதுநேரம் மௌனம் நிலவியது. பிறகு பரமஹம்சதேவர் இங்ஙனம் பகர்வாராயினர் :

"என்னுடைய சரள சுபாவத்தைப்பற்றி நான் வெளிப்படையாகப் பகர்ந்ததில் குற்றம் ஏதாவது உண்டா?" இதற்கு என்ன விடை தருவது என்று மகேந்திரருக்கு விளங்கவில்லை. எனவே அவர் ஒன்றும் பதில் உரையாதிருந்துவிட்டார்.

"இப்படி நான் பகர்ந்ததில் இழுக்கு ஏதும் இல்லை. ஆத்ம சாதன சம்பந்தமாக உங்கள் எல்லாரிடத்தும் உறுதிப்பாடு இருத்தல் அவசியம் என்ற கருத்தை அடிப்படையாகக்கொண்டு இங்ஙனம் நான் பகர்ந்துள்ளேன்."

சிறிது நேரத்துக்குப் பிறகு பூர்ணனை மனதில் வைத்துக்கொண்டு "அவனை நீ இங்கே அழைத்து வருவாயா?" என்று வினய பூர்வமாகக் கேட்டார்.

சிறிது தயக்கத்துடன் மகேந்திரர் இயம்பியதாவது : "ஆம் ஐயனே. அவனை அழைத்து வரும்படி யாராவது ஒருவனிடம் சொல்லியனுப்புகிறேன்."

சிறிது ஆவலுடன் பரமஹம்சதேவர் பகர்ந்ததாவது: "பூர்ணன் விஷயத்தில் நான் இலக்கை எட்டியவனாகிறேன்!"

பரமஹம்சதேவர் தம்முடைய திட்டம் நிறைவேறுவதற்காக அந்தரங்கக் கூட்டம் ஒன்றை உருவாக்கி வந்தார். அந்தக் கூட்டத்தில் இறுதி அங்கத்தினனாகப் பூர்ணன் அமைந்துள்ளான் என்னும் விஷயத்தை அவர் இங்ஙனம் இயம்பினாரோ? என்று மகேந்திரர் தமக்குள்ளேயே எண்ணிக் கொள்வாராயினர்.

மகாபாவம் அல்லது பக்திமார்க்கத்திலே அமைந்துள்ள அதீத நிலையைக் குறித்துப் பரமஹம்சதேவர் கிரீசர், மகேந்திரர் முதலான பக்தர்களிடம் தம்முடைய சொந்த அனுபவத்தை இங்ஙனம் குறிப்பிட்டார்:

"அத்தகைய அரிய பெரிய அருள் நிலையைப் பெறுதல் பொருட்டு நான் எவ்வளவுக்கெவ்வளவு வருந்தி வாட்டமுற்றிருந்தேனோ அவ்வளவுக்கவ்வளவு பிறகு அது பேரானந்தமாக வடிவெடுத்திருந்தது. மகாபாவம் அல்லது அதீத அருள்நிலை என்பது பக்தி மார்க்கத்திலுள்ள ஒரு தெய்வீக அனுபவமாகும். உடலிலும் உள்ளத்திலும் அது பேரதிர்ச்சியை உண்டு பண்ணுகிறது. சிறிய குடிசை ஒன்றுக்குள் யானை புகுவதோடு அந்த அனுபவத்தை ஒப்பிடலாம். அக்குடிசை அறவே தகர்த்துத்தள்ளப்படுகிறது. விழுந்தது மட்டுமல்லாது அது சுக்கல் சுக்கலாக நொறுக்கப்படுகிறது.

"இறைவனிடமிருந்து பிரிந்திருப்பதன் விளைவாக உண்டாகிற உணர்ச்சி சாமானியமானதன்று. சனாதனரும் ரூபரும் ஒரு மரத்தடியில் அமர்ந்திருந்து மகாபாவம் அல்லது பேரருள் வேட்கை பெற்றிருந்தனர். அதன் விளைவாக எந்த மரத்தடியில் அவர்கள் அமர்ந்திருந்தார்களோ அந்த மரத்திலிருந்த பச்சிலைகளில் பெரும்பகுதி கருகிப் போய்விட்டன. அந்த அதீத நிலையில் நான் பாஹிய பிரக்ஞையற்றவனாக மூன்று நாள் இருந்தேன். என் உடல் அசையவில்லை. இருந்தபடி ஒரே இடத்தில் கிடந்தேன். வெளியுலக உணர்வை நான் மீண்டும் பெற்ற பிறகு எனக்குத் தந்த்ர சாதனங்கள் புகட்டி வந்த குருவாகிய பைரவி பிராம்மணி அம்மை என்னை நீராட்டுதல் பொருட்டு அழைத்துச் சென்றார். அப்படி அழைத்துச் சென்றவருக்கு நேராக என் உடலைத் தொட இயலவில்லை. தடித்த போர்வை ஒன்றைக்கொண்டு என் உடல் மூடப்பட்டிருந்தது. அத்தகைய போர்வை போட்டு என் உடலை மூடிய பிறகே அந்த அம்மையாருக்கு என் கரத்தைப் பிடித்து அழைத்துச் செல்ல இயன்றது. நான்

உணர்ச்சியற்றுத் தரையில் படுத்துக்கிடந்த பொழுது என் மேனியால் தீண்டப்பட்ட மண் முழுதும் சூளையில் வைத்துச் சுட்டது போன்று வெந்து கிடந்தது.

"நான் அந்நிலை எய்தியிருந்தபொழுது என் முதுகெலும்பின் மூலமாகக் கலப்பை ஒன்று பொத்துக்கொண்டு போனது போன்று உணர்ந்தேன். எனக்கு அழிவு காலம் வந்து விட்டது என்று நான் கூப்பாடு போட்டேன். ஆனால் என்ன? துன்பமாகத் துவங்கிய அந்த உணர்வு பிறகு பேரானந்தமாகப் பரிணமித்தது."

சாதன தசையிலே பரமஹம்சதேவர் அடைந்து வந்த இந்த அனுபவங்களையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த பக்தர்கள் திகைத்துப் போயினர்.

கிரீஷ்சந்திரகோஷரைப் பார்த்து, "சாதனத்தில் இத்தகைய தீவிரமுறையில் செல்ல வேண்டிய அவசியம் உன் போன்றவர்களுக்கு இல்லை. நான் பெற்றுள்ள அனுபவம் ஆத்ம சாதனத்தில் மிகத் தீவிரமானது. இத்தகைய அனுபவம் ஆத்ம சாதகன் ஒருவனுக்குச் சாத்தியம் என்பதை மற்றவர்கள் அறிந்துகொள்ளுதல் பொருட்டே திருவருளின் திட்டப்படி இந்த மேனியின் மூலம் நிகழ்வதாயிற்று. உலகில் உன் கடமைகள் பல உள. அவைகள் பொருட்டு உன் மனதைப் பங்குபோட்டுத் தருவது உன் போன்றவனுக்கு உசிதம். மற்று, நானோ ஒரே ஒரு லட்சியத்தைக் கடைப்பிடித்து வருகிறேன். அது பரநாட்டம் ஒன்றே. அதற்கேற்றபடி அசாதாரணமான அனுபவங்கள் இந்த மேனியின் மூலம் நிகழ்வது முறை. பரநாட்டம் ஒன்றைத் தவிர வேறு எந்த நாட்டமும் நான் கொள்ளவில்லை. என் மூலம் இங்ஙனம் நிகழ்ந்தது இறைவனுடைய திருவுளப் பாங்கேயாம்."

புன்னகை பூத்தவராக இந்த அனுபவத்தைக் குறித்து ஓர் உபமானத்தின் மூலம் பரமஹம்சதேவர் இங்ஙனம் விளக்கினார்: "வனம் ஒன்று இருக்கிறது. அதில் ஒரு மரம் கிளையேதும் விடாது செங்குத்தாக வளர்ந்து மற்ற மரங்களுக்கெல்லாம் மேலே தலை தூக்கி நிற்கிறது. ஏனைய மரங்களோ பல கிளைகளை உடையவைகளாக நாலுபக்கமும் பரவி இருக்கின்றன." இதைக் கேட்ட பக்தர்கள் வியப்புடன் புன்னகை பூண்டனர்.

"இங்ஙனம் நான் பெற்றுவந்த அனுபவங்கள் ஆத்ம சாதனத்தில் இடம் பெறுகின்றன என்பதை உலகத்தவர்கள் அறிந்துகொள்ளுதல் பொருட்டே நிகழ்ந்தனவாம். இத்தகைய அனுபவம் உலகத்தவர்களுக்கு எட்டாது. ஆயினும் பற்றற்ற பாங்கிலே நீங்கள் உலகில் வாழ்ந்துவர வேண்டும். சேற்றில் வாழ்கின்ற மீன் தன்மீது ஒட்டுகிற சேற்றை உதறித்தள்ளுவது போன்று உலகத்தவர்களாகிய நீங்கள் வாழ்ந்து வரும் வாழ்வின் விளைவாக உங்கள்மீது படிகின்ற குற்றம் குறைபாடுகளை உதறித்தள்ளிவிட வேண்டும். நீங்கள் அக்ஞானக் காரிருள் சூழ்ந்த உலகில் வாழ்ந்து வருகிறீர்கள். எனினும் உங்கள் மேனியின்மீது மாசுபடியும்படி அஜாக்கிரதையாக விட்டு விடலாகாது."

கிரீஷ்சந்திரகோஷர் புன்னகையுடன் பகர்ந்ததாவது: "ஆயினும் நீங்களும் மணம் புரிந்தாக வேண்டியிருந்தது." பரமஹம்சதேவர் புன்னகையுடன் பகர்ந்ததாவது: "சமுதாய நலனை முன்னிட்டு மணம் புரிந்து கொள்ளுதல் அவசியம் என்னும் நியமனம் ஏற்பட்டிருக்கிறது. அந்த நியமனத்துக்குட்பட்டு நானும் மணம் புரிந்துகொண்டேன். ஆயினும் சம்ஸார வாழ்க்கை வாழ எனக்கு இயலாது போயிற்று. என் உள்ளத்தில் ஊற்றெடுத்துத் ததும்பி வந்த அருள் தாகம் அணைகடந்ததாயிருந்தது. அதன் விளைவாக என் கழுத்திலே பூணூல் அணிவித்த ஒவ்வொரு தடவையும் அது தானாகவே நழுவிக் கீழே வீழ்ந்து விட்டது. காமமும் காசு ஆசையும் ஒன்று சேர்ந்து மாயப்பிரபஞ்சமாகிறது. அதன் விளைவாக மனிதன் கடவுளை மறந்து விடுகிறான்."

கிரீஷ்சந்திரகோஷர்: "பின்பு எங்களைப் போன்றவர்களுக்குக் காமத்தையும், காசு ஆசையையும் அகற்றுவது எங்ஙனம் சாத்தியமாகும்?" பரமஹம்சதேவர் பகர்ந்ததாவது: "உள்ளக்கசிவோடு இறைவனிடம் பிரார்த்தனை பண்ணுவாயாக. விவேகம் வேண்டுமென்று அவரிடம் வேண்டிக்கொள்.

கடவுள் ஒருவரே மெய்ப்பொருள். ஏனைய யாவும் வெறும் மயக்கமாம். இத்தகைய எண்ணம் தெளிவடையுங்கால் இது விவேக மாகிறது. தூசியைப் பிரித்தெடுத்தல் பொருட்டு ஒரு நுண்ணிய சல்லடையின் வாயிலாக நீர் வடிகட்டப்படுகிறது. அதன் விளைவாகத் தூசிகள் யாவும் சல்லடையில் நின்று விடுகின்றன. சுத்த ஜலம் மட்டும் பிரிந்து வருகிறது. இதேபாங்கில் விவேகம் என்னும் சல்லடையை உலக வியவகாரங் களுக்குப் பயன்படுத்துவாயாக. இறைவன் ஒருவனே மெய்ப்பொருள் என்னும் தெளிவு உண்டான பிறகு நீ உலகில் வாழ்ந்திருக் கலாம். அப்பொழுது இவ்வுலகம் வித்யா மாயையாக உனக்குத் தென்படும்.

''காமத்தின் வல்லமையைச் சிறிது சிந் தித்துப்பார். விவேகத்தைப் பாழ்படுத்து கின்ற மோகன சக்தியின் திறமையைப் பற்றி எண்ணிப்பார். மாந்தர் அனைவரும் அதற்கு வசப்பட்டிருக்கின்றனர். அது மட்டு மன்று; அவர்களுடைய வல்லமைகள் அனைத் தையும் மோகன சக்தியானது கறந் தெடுத்து விடுகிறது. ஆடவனும், மகளிரும் காம நோய்க்கு வசப்பட்டவர்களாக அமர்ந் திருப்பதைச் சிற்சில வேளைகளில் நான் காண்கின்றேன். அப்படிக் காணும்பொழுது 'இவர்கள் இருவரும் ஒழிந்துபட்டுப் போனார்கள்' என்னும் எண்ணம் என் உள் ளத்தில் உதயமாகிறது.''

இப்பொழுது பரமஹம்சதேவர் மகேந்திர ரிடம் கூறியதாவது: ''ஹரு என்னும் இளை ஞன் மிக நல்லவன். ஆனால் காமம் என் னும் பிடாரி அவனைப் பிடித்திருக்கிறது. ஹரு எங்கே என்று மக்கள் கேட்கிறார்கள். மற்று, அவன் இருக்கும் இருப்பிடம்தான் யாது? ஆலமரத்தடியில் தன்னந்தனியனாக அவன் அமர்ந்திருப்பதை மற்றவர்கள் பார்க் கிறார்கள். முன்பு அவனிடம் பொலிந்து கொண்டிருந்த அழகும், ஆற்றலும், ஆனந்த மும் இப்பொழுது பறந்தோடிவிட்டன. ஆலமரத்தில் வசித்து வருகின்ற மந்த்ர சக்தி வாய்ந்த மோகம் அவனைப் பிடித்துக் கொண்டிருக்கிறது.

''ஆடவன் ஒருவன் தன் மனைவிக்கு அடி மைப்பட்டிருப்பதும் உலகின் போக்கு ஆகும். மனைவி ஆட்டுவித்த பிரகாரம் கண வன் ஆடுகிறான். உட்காரப் பண்ணி வைத்த விதம் அவன் உட்காருகிறான். இதுவே உல கின் போக்கு ஆகும்.

''இளைஞன் ஒருவன் உத்தியோகம் கிடைக் காது திண்டாடிக்கொண்டிருந்தான். காரி யாலயம் ஒன்றின் நிர்வாகியை அவன் நாள் தோறும் போய்ப்பார்த்துத் தனக்கு ஏதா வது வேலை போட்டுத் தரும்படி விண்ணப் பித்தான். ஆனால் நிர்வாகியோ, 'இப் பொழுது வேலை ஒன்றும் இல்லை. எனினும் இடையிடையே என்னை வந்து பார். ஏதா வது வேலைக்கு ஆள் அமர்த்துவது அவசியம் என்றால் அந்தவேலையை உனக்குத் தரு கிறேன்' என்று நம்பிக்கை ஊட்டி வந்தான். ஆயினும் வேலைமட்டும் கிடைத்தபாடில்லை. நாள்தோறும் நடந்துபோய் அவன் காலே தேய்ந்துபோய்விட்டது எனலாம். அவனு டைய பரிதாபகரமான நிலையை நண்பன் ஒருவனிடம் தெரிவித்தான். அந்த நண் பன் அவனைப் பார்த்து, 'அசடு! உனக்கு உலக வியவகாரம் தெரியாது. குலாப் என் னும் மாதரசியிடம் சென்று உன்னுடைய நிலைமையை அவளிடம் தெரிவி. உடனே காட்சி மாறியமைவதை நீ காண்பாய்' என் றான். வேலை கிடைக்காது திண்டாடிக் கொண்டிருந்தவனும் அங்ஙனமே செய் தான். குலாப் என்னும் மாதோ அந்தக் காரியாலயத்தின் நிர்வாகியின் வைப்பாட்டி ஆவாள். அவளிடம் தன்னுடைய நிலைமை யைப் பரிந்து அம்மனிதன் தெரிவித்தான். அவளும் அனுதாபத்துடன் அவனுக்குச் செவிசாய்த்து வேண்டியதைச் செய்து முடிப் பதாக உறுதி கூறினாள். என்ன விந்தை! அடுத்த நாள் காலையில் காரியாலய நிர்வாகி அந்த மனிதனுக்கு உடனடியாக வேலை கொடுத்தான். அது மட்டுமன்றி அந்தக் காரி யாலய நிர்வாகி ஆங்கிலப் பிரமுகன் ஒருவ னிடம் அம் மனிதனைக் குறித்துச் சிலாகித் தும் பேசினான். திடீரென்று இங்ஙனம் காட்சி மாறியதற்குக் காரணம் பெண்பால் ஒருத்தி காரியாலய நிர்வாகியின்மீது செலுத்தி வந்த மோகனசக்தியின் வல்லமையாம்,''

# எந்நாள் கண்ணி

(தாயுமானவர் இயற்றியது)

9-3. ஆணவத்தை நீக்கி அறிவூடே ஐவகையாக்
காண்அவஸ்தைக்கு அப்பாலைக் காணுநாள்
[எந்நாளோ.

ஆணவம் எனும் சொல் அணு என்னும் சொல்லினின்று வந்துள்ளது. எது சிறிய தில் சிறியதோ அது அணு. ஆகாசம் அகண்டாகாரமானது. அது அளவையில் அடங்காதது. அத்தகைய ஆகாசத்தை மஹா ஆகாசம் என்று பகர்வது பொருந் தும். இனி, மஹா ஆகாசத்தின்கண் எண் ணிக்கையிலடங்காத கடாகாசங்கள் பெய ராவில் சிருஷ்டிக்கப்படுகின்றன. ஒரு மட் பாண்டத்தினுள் கட்டுப்பட்டதுபோன்று தென்படும் ஆகாசம் கடாகாசம் எனப்படு கிறது. இது கற்பனையால் வந்தது. இதற் குத் தனி வியக்தி இருப்பதுபோல் தென்படு கிறது. அளவையும் அதற்கு இருப்பதால் அணுமயமாக அது எண்ணப்படுகிறது. ஆத லால் ஆணவம் என்னும் குறைநிலை அதன் மீது ஏற்றப்பட்டுள்ளது. ஆணவத்தைச் செருக்கு என்று சிலர் கருதுகின்றனர். இத் தகைய செருக்குக்கே பிறப்பிடம் தனக்கு ஒரு தனி வியக்தி இருப்பதாக ஜீவன் எண் ணிக்கொள்வதினின்று வருவதாம். இங்ஙனம் கடாகாசத்திற்கு நிகராக ஜீவ தத்துவத்தின் மீது ஆணவம்என்னும் குறைநிலை ஏற்றப்படு கிறது. ஜீவனும் அக்ஞானத்தால் தன்னை ஓர் உபாதியில் கட்டுப்பட்டவனாக எண் ணிக் கொள்கிறான். தான் கற்பனையாக எடுத்துள்ள சரீரத்தினுள் கட்டுண்டவனாகத் தன்னைப்பற்றி எண்ணிக்கொள்கிறான். உண் மையில் ஆகாசம் எங்ஙனம் ஒரு கட்த் தினுள் கட்டுப்படுதல் இல்லையோ அங்ஙனம் ஆத்மா ஜீவாத்மா என்னும் உபாதியில் கட்டுண்டவன் அல்லன். யுக்தியால் இவ் வுண்மையை அறிந்துகொள்ளும் ஆத்ம சாதகன் வெறும் அறியாமையினால் தனி வியக்தியென்று தனக்குத் தானே கற்பித்துக் கொள்ளும் மயக்கம்கொண்டிருக்கிறான். சச்சி தானந்தமயமாயிருக்கும் ஆத்மனுக்குப் பெரி யது, சிறியது என்னும் வேற்றுமை இல்லை, அவஸ்தைகள் ஐந்து என ஈண்டு இயம்பப் பெற்றிருக்கின்றன. உண்மையில் அவஸ்தாத் திரயம் அல்லது நனவு, கனவு, கனவற்ற உறக்கம் ஆகிய மூன்று அவஸ்தைகள்தாம் உள. துரியத்தை அவஸ்தை எனலாகாது. எதற்குத் துவக்கமும் முடிவும் இருக் கிறதோ அது அவஸ்தை. துரியம் உண்மை யில் ஆதி அந்தமற்றது. அத்தகைய துரி யத்தைத் துரியாதீதம் என நூலோர் சிலர் பாகுபடுத்துகின்றனர். அப்படிப் பாகு படுத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டால் சகுணப் பிரம்மத்தைத் துரியம் என்றும் நிர்க்குணப் பிரம்மத்தைத் துரியாதீதம் என்றும் ஆத்ம சாதகர்களுடைய வசதிக்காக வைத்துக்கொள்ளலாம். சகுணப் பிரம்ம மும் நிர்க்குணப் பிரம்மமும் உண்மையில் ஆத்ம சொருபமே. அந்த ஆத்மாவினிடத்து இரண்டு கூறுகள் இல்லை. எனவே, துரியம், துரியாதீதம் எனப் பாகுபடுத்துவதும் தத் துவபூர்வமாகப் பார்க்குமிடத்துப் பொரு ளற்றதாம்.

இனி ஐந்து அவஸ்தைகள் என்று பகர் வதில் பொருள் ஒன்று உண்டு. விழித்திருக் கும்பொழுதே கனவுநிலையில் இருக்கும் ஜீவர்கள் இருக்கிறார்கள். அன்னவர்களைப் பகல் கனவு காண்போர் எனப் பகரலாம். இனி, அயர்ந்து உறங்குகின்றபொழுதும் வெளிச்சம் அல்லது ஓசையை முன்னிட்டு விழித்துக்கொள்பவர்கள் இருக்கிறார்கள். கிட்டத்தட்ட அந்நிலை அறிதுயில் அல்லது யோக நித்திரைக்கு நிகரானது. ஆக, இந்த இரண்டு நிலைகளையும் இரண்டு அவஸ்தை கள் என்று வைத்துக்கொண்டு அவஸ்தாத் திரயம் ஆகிய ஜாக்கிரதம், சொப்பனம், சுஷுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகளோடு இணைத்துக்கொள்ளுதல் உசிதம். அப் பொழுது தத்துவபூர்வமாக உள்ள மூன்று அவஸ்தைகளை உபசாரத்துக்காக ஐந்து அவஸ்தைகள் எனப் பாகுபடுத்தலாம்.

சுத்த சைதன்யமான ஆத்மாவானது ஆணவத்தில் உட்படமாட்டாது. அதே

சுத்த சைதன்னியம் எந்த அவஸ்தையிலும் அடங்காதது. ஆணவம், அவஸ்தைகள் ஆகிய குறைநிலைகள் ஆத்மா தன்னைப் பிரகிருதி தத்துவத்தோடு இணைத்துக்கொள்வதால் கற்பனையாக வந்துள்ள விகாரங்களாம். விசாரித்துப் பார்த்து ஆத்மா தன்னில் தானாய் இருப்பதுதான் ஆத்மாவுக்குரிய நிஜநிலையாம். ஞான வாள்கொண்டு இந்த உபாதிகளை அகற்றுங்கால் ஆத்மா யாண்டும் தன்மயமானது என்பது வெளியாகும். சரியாக விசாரித்துப் பார்க்கும் பரிபாகம் அடைந்திருக்கின்ற சாதகன் ஒருவனுக்கு முறையான தத்துவ விசாரமே ஞானோதயத்துக்கு நிகராகிறது. தான் அணு அல்லன் என்னும் உண்மையை விசாரித்து அறிவதற்கேற்ப அனுபூதியையும் அக்கணமே அவன் அடையப்பெற்றவனாகிறான்.

**9-4. நீக்கப் பிரியா நினைக்கமறக் கக்கூடாப்**
**போக்குவரவு அற்றபொருள் அணைவது**
**[எந்நாளோ.**

வானத்தினின்று ஒரு துளி நீர் நிலத்தை நோக்கி வந்துகொண்டிருக்கிறது. அப்பொழுது அதற்குத் தனி வியக்தி உண்டு. நிலத்தை எட்டிய பின் கடலினுள் வீழ்ந்தால் அது தன்னுடைய யதார்த்த நிலையை அடையப் பெறுகிறது. அப்படியல்லாது நிலத்தில் வீழ்ந்தால் மறுபடியும் ஆவியாக மேலே போய் வரும் பாங்குடையதாம். அக்ஞானத்தில் உழலும் ஜீவாத்மன் வானத்தின்ன்று தரையில் விழும் மழைத்துளிக்கு நிகரானவன். அப்படியல்லாது அம் மழைத்துளி கடலினுள் விழுமாகில் புறப்பட்ட இடத்துக்கு அது திரும்பி வந்தாய்விட்டது.

அதே பாங்கில் ஞானோதயம் அடையப் பெறுகிற ஜீவாத்மா கடலினுள் வீழ்ந்த மழைத்துளிக்கு ஒப்பாகிறான்.

கடலினுள் வீழ்ந்த மழைத்துளி அக்கடலினின்று பிரித்தெடுக்கப்படமாட்டாது. பிரித்தெடுப்பதற்கான தனி வியக்தியும் அதனிடத்து இல்லை. அதேவிதத்தில் ஜீவாத்மனுக்குப் பரஞானம் வாய்க்குங்கால் தன்னைப்பற்றிய உண்மையை அவன் அறியவருகிறான். அனுபூதியடைந்தவனுடைய கோட்பாடு 'பிரியாது வணங்குவன் எப்பொழுதும்' என்பதாம். யாண்டும் ஏகமாய் உள்ள வஸ்து கற்பனையால் தன்னைப் பலஆனதாகத் தாற்காலிகமாக எண்ணிக்கொண்டிருந்தது. அனுபூதியின் பிறகு அந்த எண்ணம் ஒதுக்கித் தள்ளப்படுகிறது.

நினைப்பும் மறப்பும் மனதின் கூறுகளாகின்றன. மன அதீதத்தில் நினைப்புமில்லை மறப்புமில்லை. அந்நிலை நித்திய ஜாக்கிரதாவஸ்தை என அவஸ்தையோடு ஒன்றுகூட்டிச் சொல்லுங்கால் இயம்பப்படுகிறது. உண்மையில் அது அவஸ்தையும் அன்று, மனதோடு சம்பந்தப்பட்டதும் அன்று. அது யாண்டும் தன்னில்தானாய் இருக்கும் பேரறிவாம்.

போதல், வருதல் ஆகிய நிகழ்ச்சிகள் தேசம் அல்லது இடத்தை அடிப்படையாகக் கொண்டவை. சூரியன் கிழக்கே உதித்து மேற்கே போய் மறைகிறான். அப்படிச் சூரியனுடைய உதயத்துக்கும் அஸ்தமனத்துக்கும் இடம் தேவையாயிருக்கிறது. இடம் அல்லது தேசம் என்பது மனதின் கற்பனை. மனதற்றநிலையில் கால, தேச, வர்த்தமானம் இல்லை. யாண்டும் தன்னில் தானாய் இருக்கும் பேரறிவுப் பேரானந்தப் பெரிய பொருளுக்குப் போதற்கோ வருதற்கோ இடம் ஏதும் இல்லை. மனதால் கற்பிக்கப்பட்ட இடம் மனதில் ஒடுங்குகிறது. அந்த மனமோ ஆத்ம சொரூபத்தில் தன் வியக்தியை இழக்கிறது. போக்கு வரவு மயமான பிரகிருதிக்குத் தோற்றமும் ஒடுக்கமும் உண்டு. இதற்குச் சான்று ஒன்று எடுத்துக் கொள்வது அவசியம். சினிமாத் திரைக்கு நிகர் சிதாகாசம். இது அறிவில் பெரிய பொருள். திரையின்மீது ஏற்றப்படும் படங்களுக்கு நிகர் பிரகிருதி. பிரகிருதி மயமாயிருக்கும் மனதிற்கும் காலத்திற்கும் இடத்துக்கும் வர்த்தமானத்துக்கும் போக்குவரவு உண்டு. சிதாகாசமோ யாண்டும் தன்மயமாயிருக்கிறது. தன்மயமாய் உள்ள ஆத்ம சொரூபமே சாதகனுடைய நிஜநிலையாம். ஜீவாத்மன் மனோவிகாரங்களை ஒதுக்கித் தள்ளுவானாகில் அக்கணமே இந்த அரிய பெரிய நிலை தனக்குச் சொந்தம் என்பதை அனுபூதியில் அறிகிறான்.

# மதம் நம் நாட்டின் உயிர்நாடி

( சுவாமி விவேகானந்தர் )

புரோகிதர்களின் பயங்கரச் செயல்களுக்கும் இந்தியாவின் விழ்ச்சிக்கும் மதம் காரணமாக அமைந்துள்ளது என்று நம் நாட்டுச் சீர்திருத்தக்காரர்கள் எண்ணிச் செயல் புரிந்திருக்கின்றார்கள். அது அவர்கள் செய்த பெரும் தவறாகும். அவர்கள் அவ்வாறு நினைத்ததால் இந்து மதம் என்னும் கோட்டையை இடித்துத்தள்ள முயன்றார்கள், ஆனால் அதில் அவர்கள் தோல்விதான் அடைந்தார்கள். கௌதம புத்தர் முதல் ராம் மோஹன் ராய் வரையில் உள்ள சீர்திருத்தக்காரர்கள் ஜாதி, மதம் ஆகிய இரண்டையும் அழித்துவிட முயன்றார்கள். ஆனால் அவர்கள் தோல்வியே அடைந்தார்கள்.

என் நண்பர்களே! நான் கூறுவதைக் கேளுங்கள். இறைவன் அருளால் மதத்தைப்பற்றிய ரகசியத்தை நான் அறிந்திருக்கின்றேன். மதத்தில் எவ்விதக் குறைபாடும் இல்லை. இந்து சமுதாயத்தை அபிவிருத்தி செய்வதற்கு மதத்தை அழிக்கவேண்டிய அவசியமில்லை. இன்றைக்குச் சமுதாயம் உள்ள கீழ் நிலைக்கு மதம் எவ்விதத்திலும் காரணம் அன்று. மதத்தை முறையாகப் பின்பற்றாமல் போனதுதான் சமுதாய விழ்ச்சிக்குக் காரணமாகும். நான் இதைத் தக்க சான்றுகளுடன் நிருபிக்க முடியும், சமுதாயத்தில் இப்பொழுதுள்ள நிலை மாற்றி அமைக்கப்படவேண்டும். அதை மதத்தை அழிப்பதன் மூலமாகச் செய்ய முடியாது. மதபோதனைகளை முறையாகக் கடைப்பிடிப்பதன் மூலமாகவே செய்யமுடியும்.

நன்மைக்கோ தீமைக்கோ மத உணர்வு ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இந்தியாவில் பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருக்கிறது. மத உணர்வு இந்தியாவின் வாயுமண்டலம் முழுவதும் பரவி இருக்கிறது. நன்மைக்கோ தீமைக்கோ நாம் அந்தச் சூழ்நிலையில் பிறந்து வாழ்ந்து வருகின்றோம். மத உணர்வு நம் நாடி நரம்புகளிலும், ரத்தம் முழுவதும் பரவி இருக்கிறது. நாம் அதன் மயமாக மாறி இருக்கின்றோம். மதமே நம் உயிர் நாடியாக இருக்கிறது. மதத்தை நாம் எளிதில் விட்டுவிட முடியுமா? ஆயிரக்கணக்கான வருஷங்களாக நம்மிடத்தில் தோன்றிக்கொண்டிருக்கும் மத உணர்ச்சி திடீர் என்று எப்படி நீங்கும்? கங்கை நதி அதன் உற்பத்தி ஸ்தானமாகிய பனிப்பிரதேசத்திற்குத் திரும்பிச் சென்று அங்கிருந்து அது வேறு மார்க்கத்தில் செல்லவேண்டும் என்று நினைக்கின்றீர்களா? ஒருவேளை அது நிகழ்ந்தாலும் நம்நாடு தனக்கே உரிய ஆன்மீகவாழ்வைத் துறந்து அரசியலையோ பொருளாதாரத்தையோ வேறு எதையோ ஏற்றுக்கொள்ளாது. உங்களுக்கு எதிர்ப்பு எங்குக் குறைவாகஇருக்கிறதோ அங்குதான் நீங்கள் வேலை செய்யமுடியும். இந்தியாவில் மதத்துறையில்தான் எதிர்ப்புக் குறைவாக இருக்கிறது.

மதந்தான் நமக்கு வளர்ச்சியைத் தரும். மதவழி செல்வதுதான் இந்தியாவுக்கு எல்லா நலனையும் தரும். அரசியல்துறையிலோ சமுதாயத்துறையிலோ நாடு முன்னேற்றம் அடையவேண்டிய அவசியம் இல்லை என்று நான் கூறவில்லை. நான் கூறுவது என்ன என்றால் அவைகளெல்லாம் நமக்கு இரண்டாம்தரமானவைகள். மதம் தான் முக்கியமானது. இதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். இந்தியன் ஒருவன் முதலில் மத உணர்ச்சி உடையவனாக இருக்கவேண்டும், மற்றவை எல்லாம் அதன் பிறகுதான். ஆன்மீக உணர்வு தூயதாகவும், வலிவுடையதாகவும் நம்மிடத்தில் இருக்குமானால் எல்லாம் சரியாகிவிடும். சமயத்துறை தூய்மையாகிவிட்டால் அரசியல், சமுதாயத் துறைகளிலுள்ள குறைபாடுகளும் நம் நாட்டின் வறுமையும் நம் நாட்டைவிட்டு அகன்றுபோகும். மதத்தின் மூலமாகத்தான் சமுதாயச் சீர்திருத்தத்தையும் அரசியல் சீர்திருத்தத்தையும் கொண்டுவரமுடியும்.

சமுதாய, அரசியல் துறைகளில் கொண்டுவரும் சீர்திருத்தங்கள் சமய வளர்ச்சியை உண்டாக்க வேண்டும். அப்பொழுதுதான் மக்கள் அவற்றை ஏற்றுக்கொள்வார்கள்,

---

# பராக்கிரமம் படைத்திரு

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1981ல் திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவன நவராத்திரி விழாவில் நிகழ்த்திய சொற்பொழிவு)

[93ஆம் பக்கத் தொடர்ச்சி]

விவேகானந்தருடைய தாயார் புவனேசுவரி மாதா என்பவர் ஆவார். அவர் வீரமே வடிவெடுத்தவர். அவருக்கு மூன்று மகன்கள் இருந்தார்கள். விவேகானந்தர் மூத்தவராவார். மகேந்திரநாத தத்தர், பூபேந்திரநாத தத்தர் என்னும் இரண்டு சகோதரர்கள் அவருக்கு இருந்தனர். பூபேந்திரநாத தத்தர் ஆங்கிலேயருக்கு விரோதமான புரட்சிக் கட்சியில் சேர்ந்து இருந்தார். பூபேந்திரநாத தத்தரைத் தேடிப் பிடிப்பதற்கு ஆங்கிலேயர்கள் முயன்றபொழுது அவர் ஜெருசலத்தின் வழியாக நடந்தே ஜெர்மனிக்குப் போய்விட்டார். "நீ எத்தகைய மக்களைப் பெற்றெடுத்திருக்கின்றாய். ஒரு மகன் சந்நியாசியாகப் போய்விட்டான், மற்றொரு மகன் நாடோடியாகப் போய்விட்டான்" என்று புவனேசுவரி மாதாவைப் பலர் பரிகாசம் செய்தார்கள். புவனேசுவரி மாதா அதற்குச் சாந்தமான முறையில் இருந்து பதில் தந்ததாவது: "நான் ஒரு மகனைப் பரமாச்சாரியராக ஆக்கினேன். அவன் வீரமே வடிவெடுத்தவன். நாட்டுக்காகத் தியாகம் செய்யக்கூடிய மற்றொரு மகனையும் நான் பெற்றெடுத்திருப்பதற்கு மகிழ்வு அடைகின்றேன்."

விவேகானந்தருடைய தந்தை விசுவநாத தத்தராவார். அவர் உயர்நீதி மன்றத்தில் வழக்கறிஞராக இருந்தார். தம் தொழிலில் அவர் ஏராளமாகச் சம்பாதித்தார். தாம் சம்பாதித்த பொருளை நல்ல காரியத்துக்கு உடனுக்குடன் செலவு செய்து வந்தார். "பணத்துக்கு ஒருவன் பாலம் போன்று இருக்கவேண்டும். பாலத்தின் ஒருபுறம் நீர் வந்து கொண்டிருக்கும்; மற்றொரு புறம் அந்த நீர் வெளியே சென்று கொண்டிருக்கும்." இங்ஙனம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்துள்ளார். இந்த உபதேச மொழியை விசுவநாத தத்தர் தம் வாழ்க்கையில் செயலுக்குக் கொண்டு வந்தார். ஒரு சமயம் புவனேசுவரி மாதா தம் மகன் நரேந்திரனிடம் கூறியதாவது: "உன் தந்தை சம்பாதிக்கும் பொருளை எல்லாம் உடனுக்குடன் செலவு செய்து கொண்டே இருக்கின்றார். உனக்காக அவர் என்ன சேமித்து வைததிருக்கின்றார் என்று அவரைக் கேள்." நரேந்திரர் தந்தையிடம் சென்று "அப்பா, எனக்கு எதிர்காலத்தில் நீங்கள் சேர்த்து வைத்துள்ள செல்வம் எது?" என்று கேட்டார். விசுவநாத தத்தர் பகர்ந்ததாவது: "குழந்தாய்! உனக்காக நான் தேடிவைத்த செல்வம் நீயே; நீ எத்தகையவன் என்பதைக் கண்ணாடியில் போய்ப் பார்." நரேந்திரன் கண்ணாடியில் போய்ப் பார்த்தபொழுது அவனுடைய பிம்பத்தை அதில் கண்டான். தந்தையார் கூறின கருத்தை அறிந்து கொண்டான். "எனக்காகத் தேடி வைத்த செல்வம் நானே, நான் தன்னம்பிக்கை உடையவனாக இருக்கவேண்டும். நான் பிறரைச் சார்ந்திருக்கலாகாது; என்னை ஆற்றலுடையவனாகவும், அறிவுடையவனாகவும் செய்து கொள்ளவேண்டும்." இங்ஙனம் தந்தை கூறியதைப் பொருள் படுத்தினர்.

தந்தை காலமான பிறகு விவேகானந்தருடைய குடும்பம் வறுமைக்கு உள்ளாகியது. குடும்பத்தினர் சிலவேளை உணவில்லாமல் பட்டினி கிடக்கின்ற நிலையும் ஏற்பட்டது உண்டு. வீட்டிலுள்ள சிறிது உணவைத் தாயும் மற்றவர்களும் அருந்தட்டும் என்று எண்ணிய நரேந்திரன் தாம் வெளியில் சாப்பிட்டு வந்து விட்டதாகக் கூறிவிடுவார். இந்தச் சமயத்தில் நரேந்திரன் பரமஹம்சரால் ஆட்கொள்ளப்பட்டார். அப்பொழுது அவருடைய உள்ளத்தில் ஒரு போராட்டம் ஏற்பட்டது. தாயாரிடம் அப்போராட்டத்திற்கு முடிவு காண்பதற்குச் சென்றார். "அம்மா! நான் உங்களுக்கும், என் உடன் பிறந்தவர்களுக்கும் ஆற்ற வேண்டிய கடமை உள்ளது. உலகத்துக்கு உதவ

வேண்டுமென்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் என்னை ஆயத்தப்படுத்துகின்றார். குடும்பத்துக்கு நான் ஆற்ற வேண்டிய கடமையைச் செய்வதா! ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் என்னை எப்பணிக்காக ஆயத்தப்படுத்துகின்றாரோ அப்பணியைச் செய்வதா? இந்தச் சிக்கலை நீங்கள் அகற்றி வைக்க வேண்டும்'' என்று தாயாரைக் கேட்டார். தாயார் அளித்த பதிலாவது: "குழந்தாய்! என்னைப் பற்றியோ குடும்பத்தைப் பற்றியோ கவலைப்படவேண்டாம். உனக்கு எது நல்லது என்று தோன்றுகின்றதோ அதை நீ செய்யலாம்.'' இவை வீரத்தாயின் சொற்களாகும்.

அன்னை பராசக்தி வீரமாதா என்று அழைக்கப்படுகின்றாள். வீரமாதாவின் அம்சமாக வந்த புவனேசுவரி மாதா நரேந்திரனைப் பெற்றெடுத்தார். விசுவநாத தத்தர் ஒரு தந்தை எப்படி இருக்க வேண்டுமென்பதைக் காட்டித் தந்துள்ளார். நல்வழியில் பொருளைச் சம்பாதித்து நல்வழியில் விசுவநாத தத்தர் அதைச் செலவு செய்தார். அது ஒரு தந்தைக்குரிய பாடமாகும். நரேந்திரன் தம்பிகள் இருவருக்கும் விவாகம் செய்துகொள்ளக்கூடாது என்று கூறி இருந்தார். தம்பிகள் இருவரும் அவர் சொற்படி விவாகம் செய்துகொள்ளவில்லை. எனவே அக்குடும்பத்தில் உள்ள அனைவரும் வீரியம் நிறைந்தவர்களாக இருந்திருக்கின்றார்கள். உலகத்தில் எப்படியோ வாழ்ந்திருப்பது என்பது எல்லாருக்கும் பொது. அது ஒரு பெரிய காரியம் அன்று. வீரியத்துடன் வாழ்ந்திருப்பது என்றால் என்ன? லக்ஷியத்தை விட்டுப் பிசகாதிருப்பது என்பது வீரியத்துடன் வாழ்ந்திருப்பதாகும். சூழ்நிலைக்கு ஏற்றவாறு ஒரு நாளைக்கு ஒரு தீர்மானம் செய்து மனச் சஞ்சலத்தோடு வாழ்ந்திருப்பவாகள் வீரியத்துடன் வாழ்ந்திருப்பவர்கள் அல்லர். தீர்மானம் செய்து ஒரு லக்ஷியத்தில் இறங்கினால் கடைசி வரையில் அந்த லக்ஷியத்தை விட்டுப் பிசகாதிருக்க வேண்டும்.

வீரமாதாவாக இருக்கின்ற அன்னை பராசக்தி யாரால் ஆராதிக்கப்படுகின்றாள்? வீரர்களால்தான் ஆராதிக்கப்படுகின்றாள். வீரர்கள் யார்? வாழ்க்கையில் வருகின்ற ஒவ்வொரு சோதனையையும் நடுநிலை பிசகாதிருந்து, நெறிபிறழாதிருந்து, அஞ்சாதிருநது சமாளிப்பவர்கள் வீரர்களாகின்றார்கள். அத்தகையவர்களுக்குத்தாம் பரஞானம் வாய்க்கின்றது. கோழைகள் பரஞானத்தைப் பெறமுடியாது. "ந அயம் ஆத்மா பலஹீனேன லப்ய:''என்பது உபநிஷத வாக்கு. இந்த ஆத்மா பலஹீனனால் அடையப்படுவதன்று என்பது அதன் பொருள். எத்தகைய கடினமான சூழ்நிலையிலும் சற்றும் மனம் தளராதிருப்பவர்களைத் தெய்வமே போற்றுகின்றது. வாழ்க்கையில் அனுகூலமான சூழ்நிலையும் பிரதிகூலமான சூழ்நிலையும் மாறி மாறி வந்துகொண்டே இருக்கும். அவ்விரு சூழ்நிலைகளிலும் மனதை நடுநிலையில் வைத்துக்கொண்டு லக்ஷியத்தைவிட்டுப் பிசகாது போய்க்கொண்டிருக்க வேண்டும்.

பாரதப்போர் முடிந்த பிறகு பாண்டவர் ஐவரையும் கிருஷ்ணபரமாத்மா பீஷ்மரிடம் அழைத்து வந்தார். பாண்டவர்களுள் தர்மவானாக இருந்த யுதிஷ்டிரனை அரசனாக்க வேண்டுமென்பது கிருஷ்ணனுடைய திட்டமாகும். கிருஷ்ணன் இதை வெளியில் சொல்லாது தாம்மட்டும் சங்கல்பம் செய்திருந்தார். கிருஷ்ணனுடைய திட்டம் அவ்வாறிருக்க மற்றவர்கள் போட்ட திட்டம் நிறைவேறவில்லை. போரில் பாண்டவர்கள் வென்றார்கள். பாண்டவர்கள் வெற்றி அடைந்ததைத் துரியோதனன் தன் போக்கில் விமர்சனம் செய்தான். போரில் அடிபட்டுக் கவனிப்பாரின்றித் தன்னந்தனியனாக ஓர் இடத்தில் கிடக்கின்றான். அப்பொழுது அவன் தனக்குள்ளே எண்ணிக்கொண்டதாவது:"எனக்கு இத்தகைய நிலை வருமென்று இதுவரை நான் எண்ணவில்லை. பாண்டவர்களிடமிருந்து ராஜ்யத்தைப் பிடுங்கி இளமையில் நான் அதை நன்கு அனுபவித்துவிட்டேன்.பாண்டவர்கள் ராஜ்யத்தை அனுபவிக்காது இது நாள் வரை திண்டாடிக் கொண்டிருந்தார்கள். நான் அனுபவித்து ஒதுக்கிய ராஜ்யத்தை அவர்கள் வைத்து அனுபவிக்கட்டும். நான் வீரசொர்க்கத்தில்

இருப்பேன்.'' இங்ஙனம் தன் வீராவேசத்தை வெளிப்படுத்தினன். இது தர்மத்துக்கு முரண்பட்டது. முரட்டுத்தனமான உறுதிப்பாடாகும். தர்மத்தோடு முரண்படாத முறையில் யுதிஷ்டிரர் பகர்ந்ததாவது: ''எங்களுடைய ராஜ்யத்தில் எங்களுக்கு ஐந்து கிராமங்களையாவது தரும்படி பெரியோர்கள் உன்னைக் கேட்டார்கள். அன்று நீ அவர்கள் சொற்களை மறுத்துவிட்டாய். சாகப்போகும் நிலையில் இப்பொழுது நீ இருக்கின்றாய். ராஜ்யத்தைத் தானம் செய்வதாக நீ எண்ணுகின்றாய். நான் க்ஷத்திரியன்; நான் யாரிடத்திலும் தானம் பெற்றுக் கொள்ளமாட்டேன். நாங்கள் ஐவர் இருக்கின்றோம். எங்களுள் யாராவது ஒருவரோடு நீ சண்டைபோட்டு அவரைக் கொன்றுவிடுவாயானால் மீதியுள்ள நால்வரும் வனத்துக்குப் போய்விடுகின்றோம். ராஜ்யம் உன்னுடையதாக இருக்கும்.'' இது வீரத்தின் உச்சநிலையாகும்.

பீமன் பகர்ந்ததாவது: ''துரியோதனா, நீ சபையில் திரௌபதியைத் தொடையைத் தட்டி அவமானம் செய்தாய். நீ எந்தத் தொடையைத் தட்டினாயோ அந்தத் தொடையில் அடித்து உன்னைக் கொல்வதாக அன்றே தீர்மானித்துள்ளேன். இப்பொழுது சண்டைக்கு வா. என் கதாயுதத்தினால் உன் தொடையைத் தகர்த்தெறிவேன்.'' துரியோதனன் பகர்ந்ததாவது: ''பீமா, உன்னுடன் கதாயுதப் போர் செய்ய வேண்டும் என்று நெடுநாள் ஆசை கொண்டிருந்தேன். கடைசியாக நாம் இருவரும் போர் செய்வோம்.'' இருவரும் கதாயுதப் போர் நடத்தினார்கள். போரைப் பார்க்கப் பயங்கரமாக இருந்தது. அவர்கள் இருவரும் மோதிக்கொண்டது இரண்டு யானைகள் ஒன்றோடொன்று மோதிக்கொண்டன போன்று இருந்தது. அர்ஜுனன் கிருஷ்ணனைப் பார்த்தபொழுது கிருஷ்ணன் தொடையைத் தட்டி அர்ஜுனனுக்கு ஞாபக மூட்டினார். பீமன் பார்வை அர்ஜுனன் மேல் திரும்பியபொழுது அர்ஜுனன் தொடையைத் தட்டினான். அது பீமனுடைய சபதத்தை அவனுக்கு ஞாபக மூட்டுவதாக இருந்தது. துரியோதனன் கதாயுதத்தை வீசி எறிந்துவிட்டுத் தப்பித்துக் கொள்வதற்கு உயரக் குதித்தான். அப்பொழுது பீமன் துரியோதனனுடைய இரண்டு தொடைகளையும் சேர்த்து தன் கதாயுதத்தால் அடித்து அவனைக் கீழே வீழ்த்தினான். அப்பொழுது துரியோதனன் பகர்ந்ததாவது: ''பீமா, நீ ஒரு க்ஷத்திரியனா? க்ஷத்திரிய தர்மம் தெரியாதா?'' பீமன் துரியோதனனை நிதானமாகக் கேள்விகள் கேட்டான். ''நீ வனபோஜனத்துக்கு எங்களை அழைத்துப்போய் எங்களுக்கு விஷம் கொடுத்தாய். அது க்ஷத்திரிய தர்மமா? நான் மயங்கிக் கிடந்தபொழுது என்னைக் கட்டித் தண்ணீரில் போட்டாய். அது க்ஷத்திரிய தர்மமா? அரக்கு மாளிகை கட்டி எங்களை அங்குத் தங்க வைத்தாய். நாங்கள் அதில் தூங்கிக்கொண்டிருந்த பொழுது எங்களைக் கொல்வதற்கு அதில் நெருப்பு வைத்தாய். அது க்ஷத்திரிய தர்மமா? திரௌபதியைச் சபை நடுவே கொண்டுவந்து அவமானப் படுத்தினாய். அது க்ஷத்திரிய தர்மமா? தாயாதிகளாகிய எங்கள் ராஜ்யத்தைப் பிடுங்கிக்கொண்டு எங்களை வனத்துக்கு ஓட்டினாய். அது க்ஷத்திரிய தர்மமா? அபிமன்யு ஆயுதம் இல்லாமலிருந்தபொழுது பலர் ஒன்று சேர்ந்து அவனை அடித்துக் கொன்றீர்கள். அது க்ஷத்திரிய தர்மமா?'' இவற்றை எல்லாம் கேட்டவுடன் துரியோதனன் வெட்கித் தலை குனிந்தான்.

ஒருவன் வீரனாக இருக்கலாம். அவன் தன்னுடைய வீரத்தை முறை தவறி உபயோகிக்கக் கூடாது. தன்னிடத்திலுள்ள வீரத்தை அமைதியோடு கையாளவேண்டும். துரியோதனன் சரியான முறையில் தன் வீரத்தைக் கையாளவில்லை. அவன் சாகப்போகின்ற நிலையில் இரவு நேரம் முழுவதும் யோசித்துப் பார்த்தான். ஓரளவு அவனுக்குப் புத்தி வந்தது. ஒவ்வொரு படித்தரத்திலும் தர்மத்தை விட்டுப் பிசகிய பாங்கு துரியோதனனுக்கு ஞாபகத்துக்கு வந்தது. அப்பொழுது அவன் அதைக் குறித்து ஓரளவு வருந்தினான். துரியோத

ன் அந்த ஜன்மத்தில் பெற்ற லாபம் அதுவே. வாழ்க்கையில் அடிபடும்பொழுது அரக்கத்தன்மை வாய்ந்தவர்களுடைய மனதும் மாறி அமைகின்றது. அரக்கர்கள் ஒவ்வொரு ஜன்மத்திலும் வாழ்க்கை சம்பந்தமான இரண்டொரு பாடங்களை நிதானமாகக் கற்றுக்கொள்கின்றார்கள். வாயுவேகம் மனோவேகத்தில் நல்லறிவு பெறுகின்றவர்களும் இருக்கின்றார்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய காலத்தில் கிரீஷ்சந்திரகோஷ் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் பஞ்சமகா பாதகங்களையும் செய்தார். அவரைவிட மோசமானவர் ஒருவரைப் பார்க்க முடியாது. அத்தகைய கொடிய நிலையிலிருந்தவர் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் தொடர்பு வைத்தார். ஒரே ஜன்மத்தில் அவர் தம் கொடிய தன்மைகளையெல்லாம் ஒழித்துவிட்டுப் பண்பாட்டில் விவேகானந்தருக்கு நிகராகத் தம்மை உயர்த்திக்கொண்டார். அதை அவருடைய வீரியம் என்று பகரலாம்.

துரியோதனன் தாயாதிகளாகிய பாண்டவர்களிடம் மிகக் கொடுமையான முறையில் நடந்துகொண்டான். அவன் மற்றவர்களிடம் பெருந்தன்மையோடு பழகினான். சகோதரர்களிடம் அவனுக்கு ஏற்பட்டிருந்த வெறுப்பு அவனைவிட்டு நீங்கவே இல்லை. வெறுப்புணர்விலேயே அவன் வாழ்க்கையை முடிவுக்குக் கொண்டுவந்தான்.

தர்மருடைய வாழ்வு வீரியத்தில் வசீகரமாக வந்து அமைந்தது. பாரதப் போரில் அவர் வெற்றி அடைந்தார். அப்போரில் ஏராளமான மக்கள் மாண்டு போனார்கள். அவ்வளவு பேரைக் கொன்று பெற்ற ராஜ்யத்தை ஏற்றுக்கொள்ள மறுத்தார். ராஜ்யம் ஆள்வதற்குப் பதிலாகத் தவத்துக்குப் போக முடிவு செய்தார். அப்பொழுது கிருஷ்ணன் அவருக்கு நல்வழியைப் புகட்டுவதற்கு அவரைப் பீஷ்மரிடம் அழைத்து வந்தார். பீஷ்மரிடம் வந்த தர்மர், பீஷ்மருக்கு வணக்கம் செலுத்தி விட்டுக் கண்ணன் பின் மறைந்து நின்றார். மறைந்து நிற்பதற்குக் காரணம் என்னவென்று பீஷ்மர் கேட்டார். போரில் பலரைக் கொன்று அழித்து விட்டேன். ஆகையால் உங்கள் முன் வர மனம் சம்மதிக்கவில்லை என்றார் தர்மர். “போரில் கொன்றது குற்றமென்றால் நான் அதிகம் பேரைக் கொன்று இருக்கின்றேன். துரியோதனனோடு சேர்ந்துகொண்டு உங்கள் சேனைகளை எல்லாம் அழித்துத் தள்ளினேன். எனவே நான் உன்னைவிடப் பெரிய குற்றத்தைச் செய்திருக்கின்றேன். ஆனால் நான் அதைக் குற்றமாக எடுத்துக் கொள்ளவில்லை. இறைவனுடைய திருவுளம் என்று அந்தச் செயலை எடுத்துக் கொண்டேன்.” துஷ்டனாகிய துரியோதனனோடு பீஷ்மர் சேர்ந்தார். தம் ஆற்றல் முழுவதையும் அவனுக்காகப் பயன்படுத்தினார். துரியோதனனுடைய சேனைக்குப் பீஷ்மர் தலைமை வகித்தார். பீஷ்மர் துரியோதனனிடம் பகர்ந்ததாவது: “துரியோதனா, நீ போரில் தோற்றுப் போவாய். நான் வஞ்சகமில்லாது போர் புரிவேன். ஆனால் தோல்விதான் அடைவேன்.’ அவர் சொன்ன பிரகாரம் துரியோதனனுக்குச் சேனாதிபதியாக இருந்து நன்கு போர் புரிந்தார். பாண்டவர்களுடைய பெரும்பாலான சேனைகளைத் துடைத்துத் தள்ளி விட்டார். ஒன்பது நாட்களுக்குப் பிறகு கிருஷ்ண பரமாத்மாவும், பாண்டவர்களும் பீஷ்மரிடம் வந்தார்கள். பாண்டவர்களுள் அர்ஜுனன் பகர்ந்ததாவது: “பாட்டனாரே, நாங்கள் ஒன்பது நாட்கள் போர் புரிந்தோம். இன்னும் இரண்டொரு நாட்களில் எங்கள் சேனை ஒழிந்துவிடும் நிலையில் இருக்கிறது. ஆனால் நீங்கள் எங்களுக்கு வெற்றி அடைவோம் என்று ஆசி உரைத்துள்ளீர்கள். போர் இப்போக்கில் போய்க்கொண்டிருந்தால் நாங்கள் எப்படி வெற்றி அடைவோம் என்பது எங்களுக்குத் தெரியவில்லை.” போர் நடந்துகொண்டிருந்தபொழுது ஒன்பது நாட்களுக்குப் பிறகு அர்ஜுனன் பீஷ்மரிடம் இங்ஙனம் கேட்டான். அதற்குப் பீஷ்மர் பதிலளித்ததாவது: “இப்பொழுது வெற்றிக்கு வழி சொல்லுகிறேன் கேளுங்கள். ஒன்பது நாட்களாக நடந்த யுத்தத்தை நீங்கள் கவனித்துப் பார்த்திருந்தால் உங்களுக்கு விஷயம் விளங்கி இருக்கும். என்னைச் சிகண்டி எதிர்த்து வந்தபொழுதெல்லாம் நான்

போரிடாமல் பின்வாங்கினேன். இதை நீங்கள் கவனித்து இருந்திருக்கலாம். இப்பொழுது என்னைப் பற்றிய ஒரு ரகசியத்தை உங்களுக்குச் சொல்கின்றேன். என்னை எல்லாராலும் கொல்ல முடியாது. நான் ஆயுதம் தாங்கி இருக்கும் பொழுது கிருஷ்ணன் கொல்லலாம். ஆயுதம் தாங்காதிருக்கும்பொழுது அர்ஜுனன் கொல்லலாம். மற்றவர்கள் யாரும் என்னைக் கொல்ல முடியாது. ஆனால் பெண்பால் ஒருத்தியோ பேடு ஒருத்தியோ ஆயுதம் எடுத்து என்னை எதிர்த்துப் போரிட்டால் என்னுடைய ஆயுதம் கீழ விழுந்துவிடும். இதுதான் என்னைப்பற்றிய ரகசியம். என்னுடைய ஆயுதம் கீழே விழுந்தவுடன் உனக்கு உரிய போர்முறையைக் கையாண்டு என்னைப் போரில் தோற்கடிக்கலாம்.'' "தாங்கள் ஏன் இந்த ரகசியத்தை ஒன்பது நாட்களாகக் கூறவில்லை?'' என்று அர்ஜுனன் கேட்டான். "கிருஷ்ணபரமாத்மாவினுடைய திட்டத்தில் என்னுடைய பகுதி முடிந்துவிட்டது. கிருஷ்ணன் யாவரையும் துடைக்க வநதிருக்கின்றார். அந்தச் செயலில் நான் கருவியாக இருக்கவேண்டிய பகுதி முடிந்துவிட்டது'' என்றார் பீஷ்மர். பீஷ்மர் அவ்வளவு பேர்களைக் கொல்லுவதில் கிருஷ்ணனுடைய திட்டத்துக்குத் தாம் கருவியாக இருப்பதை உணர்ந்தமையால் அதன் விளைவுக்குச் சம்பந்தப்படாதவராக இருந்தார். மேலும் தம்மைக் கொல்வதற்குத் தாமே வழிகாட்டித் தந்தார். இது அவருடைய விரியத்தைக் காட்டுகிறது.

அரசன் தனக்குச் சொந்தம் அல்லன். அவன் குடிமக்களுக்குச் சொந்தம். அரசன் ஒருவன் இப்படிக் கருதினால்தான் அவன் விரியம் உடையவனாகின்றான். தர்மர் தாம் குடிமக்களுக்குச் சொந்தம் என்று எண்ணி ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொண்டார். அவருடைய வீரியம் இதினின்று வெளியாகின்றது.

கிருஷ்ணனுடைய வீரியம் ஒரு போக்கில் வெளியாகின்றது. பாரதப்போர் முடிந்தான பிறகு காந்தாரிக்கு ஞானக் கண்ணைக் கொடுத்துக் கண்ணன் அவளை யுத்தகளத்துக்கு அழைத்துக்கொண்டு போய்க் காட்டுகின்றார். தம் மக்கள் அனைவரும் சவமாகக் கிடப்பதைக் காந்தாரி ஆங்குப் பார்த்தாள். கிருஷ்ணனுக்கு அவள் சாபமிட்டாள். "கிருஷ்ணா, நீ மனம் வைத்திருந்தால் இக் கௌரவக் கூட்டத்தைக் காப்பாற்றி இருக்கலாம். நீ அவர்களைக் காப்பதற்குத் தக்கபடி முயலவில்லை. ஆகையால் இன்றிலிருந்து முப்பத்தாறு ஆண்டுகளுக்குப் பிறகு குருவம்சம் அழிந்தது போன்று உன்னுடைய விருஷ்ணி வம்சமும் அழிந்துபோக நான் சாபமிடுகிறேன்'' என்றாள் காந்தாரி. கிருஷ்ணன் அந்தச் சாபத்தை மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டது அவருடைய வீரியத்தைக் காட்டுகின்றது. அவர் சாபத்தை ஏற்றுக்கொண்ட பிறகு பகர்ந்ததாவது: "நான் பாரதப் போரைத் தடுப்பதற்கு முயன்றதுபோன்று நீங்கள் யாரும் முயலவில்லை. விராட நகரத்திலிருந்து சமாதானத்திற்காக அஸ்தினாபுரம் வந்தேன். துரியோதனன் என்னை அவமானப்படுத்தினான். அதைப் பொருட்படுத்தாது நான் எவ்வளவோ துரியோதனனுக்குப் புத்திமதி கூறியும் அவன் ஏற்றுக்கொள்ளவில்லை. உன் மகன் தன் போக்கிலேயே போய்க்கொண்டிருந்தான். அவனுக்குப் பீஷ்மர், துரோணர் போன்ற பெரியோர்கள் தர்மநெறியைப் புகட்டினார்கள். ஆனால் அவன் அவர்கள் அறவுரையை ஏற்றுக்கொள்ளவில்லை. நீயும் உன் கணவன் திருதராஷ்டிரனும் உங்கள் மக்களை அடக்கி வைத்திருந்தால் பாரதப்போர் வந்திருக்காது. உங்களால் அவனை அடக்கி வைக்க முடியவில்லை. ஆகவே போருக்கு யார் காரணம் என்பதை நீங்கள் சிந்தித்துப் பார்த்தால் தெரிந்து கொள்ளலாம். உங்கள் மக்கள் விஷயத்தில் நீங்கள் தலையிடாமல் இருந்ததும் அவர்களுடைய அக்கிரமமுமே அவர்களின் முடிவுக்குக் காரணமாக இருந்தன என்பதை அறிந்து கொள்ளுங்கள்.'' கிருஷ்ணன் இவ்வாறு கூறியதைக் கேட்ட காந்தாரியும் கிருஷ்ணனுடைய கூற்றைச் சரி என ஏற்றுக்கொண்டாள்.

(தொடரும்)

# கபீர்தாசர் சரிதம்

(96ஆம் பக்கத் தொடர்ச்சி)

பகவான் கபீருக்குக் காட்சிதந்து மறைந்த பின்பு மீண்டும் பகவானின் காட்சி பெறுவதற்குக் கபீருடைய மனம் துடிதுடித்தது. கன்றைப் பிரிந்த காராம் பசுவைப் போன்றும், கலையைப் பிரிந்த மானைப்போன்றும், பதியை இழந்த பதிவிரதையைப்போன்றும், தனயனை இழந்த தாயைப்போன்றும் கபீர் பரிதவித்தார். கபீருடைய தாய் கபீரை வீட்டுக்கு அழைத்துப்போய் அவருடைய பெருமையையும் பக்தியின் அருமையையும் தம் கணவருடைய உள்ளம் கரையுமாறு எடுத்துக் கூறினர். கபீருடைய தந்தை தமால் மிக்க மகிழ்ச்சி அடைந்தவராகக் கபீரைக் கட்டி அணைத்துக்கொண்டு ''கண்மணி! எனக்குப் பகவான் தரிசனம் ஏற்பட பகவானை அழைக்கமாட்டாயா? என்னிடத்துள்ள அக்ஞானம் நீங்கி, மெய்ஞ்ஞானம் வளராதா?'' என்று கபீரைத் துதித்து அவரைத் தெய்வமென்றே மதித்துத் தாயும் தந்தையும் நாள்தோறும் பூஜித்து வந்தார்கள்.

ஒருநாள் கபீருக்குப் பகவான் கூறிய உபதேசம் ஞாபகத்துக்கு வந்தது. ''கபீர், நீ தக்க ஆசானைத் தேடி உண்மையை அறிந்துகொள்'' என்று பகவான் கூறியதைப் பற்றிக் கபீர் சிந்திக்கத் தொடங்கினர். ''தெய்வத்தைப் பணியாத் தலையும், திருமண் அணியா நெற்றியும், சுத்தமில்லாத மனமும், தெளிவில்லாத புத்தியும், அன்பில்லாத பக்தியும், உயிர்களிடத்து இரக்கமில்லாத தவமும், சிந்தையில் தோயாத ஜபமும், நதி இல்லாத ஊரும், அரசன் இல்லாத நாடும், ஞானம் இல்லாத கல்வியும், பக்தி இல்லாத பூஜையும்,சான்றோர் இல்லாத நாடும்,நீதி இல்லாத ஆட்சியும், நிழலைத் தராத குடையும், ஞானிகளைப் பணியாத மெய்யும், பற்று நீங்காத துறவும், குரு உபதேசமில்லாத ஜன்மமும் தாழ்ந்த நிலையை அடையும்.'' இவ்வாறு கபீர் சிந்தித்த வண்ணம் ஓர் ஆசானைத் தேடிப் புறப்பட்டார். ஸ்ரீராமானந்தசுவாமிகளின் மேன்மையைக் கேள்விப்பட்டு அவரைத் தம் குருவாக மனதில் வரித்தார்.

ஸ்ரீராமானந்த சுவாமிகளைக் காண்பதற்காக அவருடைய ஆச்ரமத்துக்குப் போன பொழுது அவரை அநேக மாணுக்கர்கள் சூழ்ந்திருந்தார்கள். அவரைச் சநதிப்பதற்குத் தக்க சமயம் இதுவல்லவென்று எண்ணிக் கபீர் வீட்டுக்குத் திரும்பிவிட்டார். மறுநாள் காலை நன்கு விடிவதற்கு முன்பே ஸ்ரீராமானந்தருடைய மடத்திற்குச் சென்றார். மடத்திலிருந்த பணியாளர்கள் அப்பொழுது கபீரைப் பார்த்துவிட்டார்கள். 'இருட்டில் திருடவா வந்தாய்?' என்று கூறி கபீரை விரட்டினர்கள். கபீர் அவர்களிடம் ஸ்ரீராமானந்த சுவாமிகளைக் காணவேண்டும் என்னும் தன் விருப்பத்தை நிறைவேற்றி வைக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். ஆனல் அப்பணியாளர்கள் அவர் வேண்டுதலை நிறைவேற்றுது அவரை அடிக்க வந்தார்கள். கபீர் தம்மை வேண்டியவாறு அடித்துக்கொள்ளலாம் என்றும் அதற்குப் பதிலாக ஸ்ரீ ராமானந்தருடைய சேவை தமக்குக் கிடைத்தால் போதுமென்றும் அவர்களை வேண்டிக்கொண்டார். ஆனல் அவர்கள் சம்மதிக்கவில்லை. ஆனல் கபீரும் மடத்தைவிட்டு வெளியேறுது அங்கேயே நின்றுகொண்டிருந்தார். அபிமன்யுவைச் சூழ்ந்துகொண்ட கௌரவர்கள்போலவும், அனுமானைச் சூழ்ந்துகொண்ட அரக்கர்களைப் போலவும் கபீரை அந்தணர்கள் சூழ்ந்துகொண்டு அடிக்கத் தொடங்கினர்கள். அப்பொழுது கபீர் ''சற்குருநாதரே, மெய்ஞ்ஞானப் போதகரே, உம்மிடத்து அபயம் கேட்கின்றேன்; உம்மைத் தரிசனம் செய்ய வந்த என்னை இந்தப் பிராம்மணப் பணியாளர்கள் அடித்துத் துன்புறுத்துகிறர்கள். எனக்கு யாரும் உதவி செய்வதற்கு இங்கு இல்லையா?'' என்று அலறி அழத் தொடங்கினர். அவர் அழுத ஓசையைக் கேட்டு ஸ்ரீ ராமானந்தர் அறையிலிருந்து வெளியே வந்தார். கபீர் அடிபட்டிருப்பதைப் பார்த்து மிகவும் வருந்தி ''இச்சிறுவனை

ரத்தம் வரும்படியாக யார் அடித்தது?'' என்று கோபத்துடன் கேட்டார். அப்பொழுது அப்பணியாளர்கள் ''சுவாமி! இவன் துலுக்கன்; பசுவைத் தின்னும் பறையன்; இவன் கபடன்; இவன் உங்களிடம் உபதேசம் பெற்றுக்கொள்ள வந்திருக்கின்றான்; நீங்கள் உபதேசம் செய்ய மாட்டீர்கள் என்று பலவாறு அவனுக்கு எடுத்துக் கூறியும் அவன் போக மறுத்து எங்களை அவமதித்து 'இந்த மடம் பொதுவான இடம் என்றும் உங்களுக்கு மட்டும் என்ன சொந்தம்?' என்றும் கேட்டான். அதற்காக இவனை நாங்கள் அடித்தோம்'' என்று கூறினார்கள்.

ஸ்ரீராமானந்தர் கபீரை நோக்கிப் பகர்ந்ததாவது: ''நீ என்னிடம் உபதேசம் வாங்கிக் கொள்ள வந்தாயா? இங்குள்ளவர்களை அவமரியாதை செய்து வீண் வார்த்தைகள் பேச வந்தாயா? நீ இப்பொழுதே இவ்விடத்தை விட்டுப் போய்விடு'' என்று கூறிவிட்டு அறைக்குள் நுழைந்தார். கபீர் ஓடிச்சென்று ஸ்ரீ ராமானந்தர் காலில் விழுந்து தம் முதுகில் பட்டுள்ள அடியை அவருக்குக் காட்டினார். ஸ்ரீ ராமானந்தரைத் துதி செய்தார். ''உங்களை அடைந்த மைந்தனைப் பாதுகாக்காமல் விரட்டியோட்டலாமா?'' என்று கேட்டார். ஸ்ரீ ராமானந்தர் அங்குள்ளவர்களைப் பார்த்து இவனை இங்கிருந்து விரட்டி ஓட்டிவிடுங்கள் என்று கூறிவிட்டு அறைக்குள் சென்று விட்டார். கபீர் வருத்தத்துடன் வீடு திரும்பினார். கபீர் மீதிருந்த அடியைப் பார்த்த தந்தையார் ''உன்னை யார் இப்படி அடித்தது?'' என்று கேட்டார். தாயாரும் மைந்தன் மீதிருந்த அடியைப் பார்த்து மிகவும் துயரம் அடைந்தார். பெற்றோர்களைப் பார்த்து அப்போது கபீர் பகர்ந்ததாவது: ''கஷ்டப்படாமல் சுகம் கிடைக்குமா? ஸ்ரீ ராமானந்த சுவாமிகளிடம் உபதேசம் பெற்றுக் கொள்ளச் சென்றேன். அங்குள்ளவர்கள் என்னை அடித்துத் துரத்தி விட்டார்கள். நீங்கள் அவர்கள் மீது எவ்வித நட்வடிக்கையும் எடுக்கப் போகவேண்டாம்'' என்று கேட்டுக்கொண்டார். கபீருடைய பெற்றோர்கள் ஸ்ரீ ராமானந்த சுவாமிகளைத் திட்டியபின் அமைதியடைந்தார்கள்.

நாட்கள் கழிந்துகொண்டிருந்தன. ஸ்ரீ ராமானந்த சுவாமிகளை நினைத்து நினைத்துக் கபீர் உருகிவந்தார். ஸ்ரீ ராமானந்த சுவாமிகளைத் தமக்குக் குருவாக ஏற்றுக் கொண்டபின் வேறு யாரையும் தம்முடைய குருவாக ஏற்றுக்கொள்வதில்லை என்று முடிவுசெய்தார். ஸ்ரீ ராமானந்தரிடம் உபதேசம் பெறுவதற்காக மீண்டும் கபீர் அவர் மடத்துக்குச் சென்றார். இம்முறையும் அடிபட்டு வீட்டுக்கு வந்துசேர்ந்தார்.

ஸ்ரீ ராமானந்தரிடம் உபதேசம் பெறுவதற்கு என்ன வழி என்பதைக் கபீர் சிந்தித்துப் பார்த்தார். ஸ்ரீ ராமானந்த சுவாமிகள் விடிவதற்கு முன்பு சிறிது இருள் இருக்கும் பொழுதே காசியிலுள்ள மணிகர்ணிகை கட்டத்தின் படியில் இறங்கிக் கங்கையில் ஸ்நானம் செய்வதை அறிந்துகொண்டார். குறித்த காலத்தில் அவர் ஒரே பாதையில் போய் வந்ததையும் பார்த்தார். ஒருநாள் கபீர் மணிகர்ணிகை கட்டத்தின் படியில் போய்ப் படுத்துக்கொண்டார். ஸ்ரீ ராமானந்தர் வழக்கம்போல் அன்று காலையிலும் நீராடுவதற்குக் கங்கைக்குப் போனார். மணிகர்ணிகை கட்டத்திலுள்ள படியில் இறங்கும்பொழுது அவருடைய திருவடியை ஆங்குப் படுத்திருந்த கபீர் மேல் வைத்தார். ராமானந்தருக்கு யார் மீதோ காலை வைத்துவிட்டோமென்ற உணர்வு ஏற்பட 'ராம் ராம்' என்றார். கபீர் உடனே மந்திர தீக்ஷை கிடைத்ததென்ற மகிழ்ச்சியுடன் எழுந்தார். 'ராம் ராம்' என்பதே தமக்குரிய மந்திரமாகும் என்றும் அம்மந்திரத்தை உச்சரிப்பதன்மூலம் தம்மிடத்துள்ள பாபங்கள் நசித்துப்போகும் என்றும் நம்பினார். நெற்றியில் திருமண்ணிட்டுக்கொண்டு, துளசிமாலை அணிந்துகொண்டு, பூமாலைகளையும்பூஜைக்குரிய பொருள்களையும் எடுத்துக்கொண்டு ஜயராம்–சீதாராம் என்று ஜபம் செய்துகொண்டு ஸ்ரீ ராமானந்தர் இருக்குமிடத்துக்குக் கபீர் சென்றார். அவர் அத்தகைய வைணவக் கோலத்துடன் மடத்துக்குள் வந்ததைப் பார்த்த ஆங்குள்ள

அடியார்கள் கோபமடைந்து அவரை அடித்து திருமண்ணும் துளசி மாலையும் அணிந்திருப்பதற்குக்காரணம் என்ன என்று கேட்டார்கள். அதற்குக் கபீர் பகர்ந்த தாவது: "அடியவர்களே! பக்தர்களே! என்னை வீணாய் அடிக்கவேண்டாம். வைகறையில் ஸ்ரீ ராமானந்த சுவாமிகள் குளிக்க வந்தபொழுது எனக்கு மந்திரதீக்ஷை செய்துவைத்தார். நீங்கள் அவரைக்கேட்டால் இவ்வுண்மையை அறிவீர்கள்." இங்ஙனம் கூறிய கபீரை ஸ்ரீ ராமானந்தரிடம் இழுத்துச்சென்று அவர் முன் நிறுத்தினர்கள். 'தாங்கள் காலையில் இவனுக்கு மந்திர தீக்ஷை செய்ததாக இவன் கூறுகிறான்' என்றும் பகர்ந்தார்கள். ஸ்ரீ ராமானந்தர் கோபமடைந்து கபீர்மீது தமது மிதியடியை வீசி எறிந்தார். அது கபீர் நெற்றியின்மீது பட்டது.

கபீர் பகர்ந்ததாவது: "எம் குருநாதா! தங்கள் பாதுகை என் நெற்றியின்மீது படுவதற்கு நான் தவம் செய்திருக்கவேண்டும். நான் பெற்ற பாக்கியம் இங்குள்ள யாரும் பெற்றிருக்க முடியாது. என்மீது உங்களுக்கு எவ்வளவு அருட்கருணை உள்ளது என்று அறிகிறேன். என் ஐயனே! என் அப்பனே! துய்யனே! என்னை ஆட்கொண்ட மெய்யனே! நான் வணங்கும் தெய்வமே!" என்று துதி செய்தவண்ணம் நின்றார். அப்பொழுது ஸ்ரீ ராமானந்தர் "நான் உனக்கு எப்பொழுது உபதேசம் செய்தேன்?" என்று கேட்டார். "சுவாமி, தாங்கள் இன்று வைகறையில் நீராடப் போகும் பொழுது மணிகர்ணிகை கட்டத்தின் படியில் படுத்திருந்த என்மீது தங்கள் திருவடியை ஊன்றி 'ராம் ராம்' என்று மந்திர உபதேசம் செய்தீர்களல்லவா? தாங்கள் அதை மறந்துவிட்டீர்களா?" என்று கூறிக் கபீர் அவரை விழுந்து வணங்கினர். அப்பொழுது ராமானந்தர் பகர்ந்ததாவது: "நீயா அம் மணிகர்ணிகைப் படிக்கட்டில் படுத்திருந்தவன்? நான் உன்மீது திருவடி வைத்து 'ராம் ராம்' என்று கூறியது உண்மை." பின்பு அங்குள்ளவர்களுக்கு அவர் பகர்ந்ததாவது: "ஆதலால் இவனை மடத்தில் வைத்துப் பாதுகாத்து வாருங்கள்." ஆனால் அங்குள்ளவர்கள் கபீரை மடத்தில் வைத்துக்கொள்வது சரியல்ல என்றும், மடத்துக்குள் வராமல் தடுத்து வைப்பதே நல்லதென்றும் கூறினர்கள். அப்பொழுது ராமானந்தர் கபீரிடம் பகர்ந்ததாவது: "நீ மறைந்திருந்து மந்திர தீக்ஷை பெற்றுக் கொண்டதால் நீ மறைவாய் இருத்தலே நல்லது. ஆகையால் நீ இங்கு வராமல் இருப்பது நல்லது. ராம நாமத்தை ஜபித்துக்கொண்டு ராம பக்தியில் மூழ்கி வருவாயாக." இங்ஙனம் ஆசீர்வாதம் செய்தார். கபீர் தமக்கு இவ்வளவு கிடைத்ததே பெரும் பாக்கியம் என்று எண்ணி வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தார். அன்று முதல் ராம மந்திரத்தைத் தியானம் செய்துகொண்டு ஸ்ரீமந் நாராயணன்மீது பல கீர்த்தனைகளைப்பாடி அவற்றைப்பலருக்கும் விரித்துரைத்துக் கொண்டிருந்தார்.

இங்ஙனம் கபீர் பக்தி மார்க்கத்தில் தீவிரமாக ஈடுபட்டிருந்த பொழுது துலுக்கர்களெல்லாரும் ஒன்றுசேர்ந்து எதிர்ப்புத தெரிவித்தார்கள். கபீருடைய பெற்றோர்களிடம் துலுக்கர்கள் பகர்ந்ததாவது: "நீங்கள் துலுக்கர்களாக இருந்துகொண்டு இந்துக்களின் தெய்வங்கள் பெயர்களைக் கூறிக் கொண்டிருப்பது பொருந்தாது. எங்கள் கூட்டத்தை விட்டு நீங்கள் இந்துக்கள் வாழும் இடத்துக்குப் போய்ச் சேருங்கள்." கபீர் அதற்குப் பதில் உரைத்ததாவது: "இராமனும்அல்லாவும் ஒருவரேஆவார்கள். மதபேதங்களை உண்டாக்குவது சச்சரவை உண்டாக்குவதாகும். கடவுள் உருவத்துடனும் இருக்கின்றார்; அருவத்துடனும் இருக்கின்றார். அவரை எப்படி வேண்டுமென்றாலும் வழிபடலாம்." ஆனால் துலுக்கர்கள் இவ்வுபதேசத்திற்குச் செவி சாய்க்கவில்லை. கபீருடைய உரையைக் கேட்டுக் கபீரை வெட்ட வேண்டுமென்றும் குத்தவேண்டும் என்றும் வந்தார்கள். ஆனால் கபீர் ராமபிரானை மனதில் எண்ணி ஒரு துளசி தளத்தை எடுத்து அவர்கள் முன் போட்டார். அதிலிருந்து நெருப்புக் கிளம்பி வந்ததைக் கண்ட துலுக்கர்கள் மூலைக்கு ஒருவராக ஓடிவிட்டார்கள். (தொடரும்)

# குட்டித் திருவாசகம்

(வித்துவான் ஆதி. பாலசுந்தரன், M. A.)

“பெம்மான்! கருவை எம்மான் என்று, ஆரா அமுதம் உண்டவர்போல், அனந்தம் ஆனந்தத்து அகம் நெகிழ, ஆரா இன்பம் அறிவித்தாய்!''

“பெருமானே! திருக்கருவை என்னும் கரிவலம் வந்த நல்லூரில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே! என்று உனது திருநாமத்தைச் சொல்லித் துதித்தேன். தெவிட்டாத அமுதத்தைப் பருகியவர்களைப் போல, அளவு இல்லாத ஆனந்தத்தில் உள்ளம் திளைத்து உருக, நான் இதுவரையிலும் அனுபவித்து அறியாத இன்பநிலையை எனக்குக் காட்டியருளினாய்'' என்கிறார் அதிவீரராம பாண்டியர்.

பரம்பொருளாகிய இறைவனுடைய நினைவை நெஞ்சிலே நிறுத்துவதற்கு அவருடைய திருப்பெயர்கள் ஆதாரமாக அமைகின்றன. தன்னலம் அற்ற வழிபாடு உள்ளத்தைத் தூய்மைப்படுத்துகிறது. இறைவனுடைய நாம ஜபம் தன்னலம் அற்ற வழிபாட்டுக்கு ஆதாரமாக அமைகிறது.

தேவாமிர்தத்தைக் குறைவு இல்லாமல் உண்டவர்களின் மனம் மகிழ்ச்சி அடைவதைப்போன்று, சித்தத்தைச் சிவன்பால் வைத்து, ஏனைய சிந்தனைகளையெல்லாம் ஒழித்து, சிவனோடு ஐக்கியப்பட்ட மனம் உடையவராக அதிவீரராமபாண்டியர் மிகவும் மகிழ்ச்சி அடைகிறார். நிலையில்லாத பொருள்களே உலகத்தில் இருப்பவை. நிலை இல்லாத எந்தப் பொருளின்மீதும் வைக்கின்ற பற்றுதல் காரணமாக ஏற்படும் மகிழ்ச்சி நிலைத்து நிற்பது இல்லை. நமது மனத்திலே உண்டாகிற மகிழ்ச்சி நிலையாக இருக்கிறதா? இல்லையே! ஏன்? நிமிஷத்துக்கு நிமிஷம், நமது மகிழ்ச்சி மாறுபடுகிறதே! ஏன்? நமது உள்ளத்திலே மாறுபாட்டை உண்டாக்குகிற பொருளிடத்து நாம் பற்றுதல் வைக்கிறோம். நிலை இல்லாத, மாறுபாடு அடைகிற பொருள்களிடத்தில் நாம் விருப்பம் கொள்வதால், நமது மனத்தில் எழுகின்ற மகிழ்ச்சி நேரத்துக்கு நேரம் மாறுபடுகின்றது.

என்றும் நிலையாக இருக்கக்கூடிய, பூரணமாக இருக்கக்கூடிய, ஒரே தன்மையுடையதாக இருக்கக்கூடிய பரம்பொருளிடத்தே மனதைச் செலுத்துகின்றபோது, அதனால் ஏற்படுகின்ற மகிழ்ச்சி மாறாத மகிழ்ச்சி ஆகும்; நிலையான மகிழ்ச்சி ஆகும். மன இருளை நீக்குகின்ற மலை விளக்காகிய பரிபூரணப்பொருளை மனத்திலே எண்ணுவதால் தேவாமிர்தம் பருகிய திளைப்பு உணர்வு உண்டாகிறது.

எங்கும் நிறைந்த பரிபூரணப் பொருளை இடையறாது மனத்திலே எண்ணுகின்றவன் அந்தப் பூரண மயம் ஆகின்றான் என்பது ஆன்றோர் கருத்து. பூரணத்திற்கும் தன் ஆத்மாவுக்கும் இணைப்பை ஏற்படுத்துகிறான். தன்னுள் இருப்பது சுத்த சத்துவ உணர்வுதான் என்பதை அறிகிறான். அந்த நிலையில் அவனுடைய இந்திரியங்கள் புறத்தே செல்வதில்லை. பூரணத்துவம் பெற்றவன் ஆவன் ஆகிறான். நடமாடும் கடவுளாக, மாந்தருக்குள் தெய்வமாக ஆகிறான்.

மிகச் சிறந்த மதமான ஹிந்து மதம், மனிதன் தெய்வத்துக்கு மாறுபட்டவனல்லன்; தெய்வத்தன்மையை அடையலாம்; எப்போதும் இறை உணர்வைக் கொண்டு வாழ்ந்தால், உலகத் துன்பங்கள் எவையும் அணுகமாட்டா என்கிறது. கதிமோட்சமே இல்லை என்று சொல்லவில்லை. கடையனுக்கும் கடைத்தேறும் வழியை இந்து மதம் கூறுகின்றது.

அதிவீரராமபாண்டியர் அரசராய் வீற்றிருந்த காலத்து அல்லற்பட்டார். உலக இன்பங்களை விரும்பி ஏற்றுக்கொண்டிருந்த காலம்வரையில் இன்னல்பட்டார். கருவை எம்பெருமான் திருவருள் அவருக்குக் கிடைத்தது. தன்னைத்தானே உணரத்துவங்கினார். பொறிபுலன்களின் அவாவை நீத்தார். பேரா இயற்கைப் பெருமான் நாமங்களை மட்டும் மனத்திலே கொண்டார். அந்த

நிலையில், ஆரா இன்பத்தை இறைவா! நீ எனக்கு உணர்த்த, நான் அதனை அனுப வித்தேன் என்கிறார்.

"ஆறாக் காமக் கொடியகனல்
ஐவர் மூட்ட அவலமனம்
நீறாய் வெந்து கிடப்பேனை
நின்தாள் வழுத்த நினைவுதந்து
மாறா நேயத்து இரவுபகல்
மறவாது இருக்கவரம் அளித்தாய்!
சீறும் அரவம் முடித்த சடைக்
கருவை வாழும் செழுஞ்சுடரே!"

சீறி ஆடும் நாகப்பாம்பைச் சடாமுடியிலே தரித்துள்ள திருக்கருவை என்னும் தலத்திலே எழுந்தருளியுள்ள சிவபெருமானே!

என்றைக்கும் மாறாமல் இருக்கும், அவியாமல் இருக்கும் காமம் என்னும் கொடிய நெருப்பை ஐம்புலன்களும் வளர்க்கின்றன. இதனால், சாம்பலாகிப் போனமனம் உடைய எனக்கு உனது திருப்பாதங்களை நினைக்க நினைவு கொடுத்தாய். உனது திருவருளாலே, உன் பாதங்களை இரவும் பகலும் மறக்காமல் இருக்கும்படி வரமும் கொடுத்தாய்!

காமம் எல்லா உயிர்களிடத்திலும் அமைந்திருக்கிறது. விலங்கு, பறவை முதலிய சிற்றுயிர்களிடத்திலும் உண்டு. மக்களிடத்திலும் காமம் உண்டு. உடல் இருக்கின்ற வரையிலும் கூடவே காமம் இருக்கும். கூடவே இருந்து உடலையும், உணர்வையும் அழித்து ஒழிக்கக்கூடிய இயல்பு உடையது.

செய்த வினையின் பயனுக்கு ஏற்றவாறு நமக்கு மானுட தேகம் வந்து வாய்த்துள்ளது. "வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி" என்னும் சான்றோர் அருள் வாக்கில் மானிடப் பிறவி கிடைத்திருப்பதன் சிறப்பு குறிப்பால் உணர்த்தப்படுகிறது. எல்லா உயிர்களுக்கும் வெவ்வேறு நிலையில் மனம் அமைந்துள்ளது; என்றாலும் மனிதனுக்கு அமைந்துள்ள மனம் சிறப்புத் தன்மை உடையது; சிந்திக்கும் இயல்பு உடையது. எல்லா உயிர்களிடத்திலும் உணர்வு அமைந்துள்ளது. மனித உணர்வு பெருமையும் சிறப்பும் மிக்கது. எவ்வகையில் பெருமையும் சிறப்பும் மிக்கது? வாக்கையும், மனதையும் கடந்து வியாபித்து நிற்கும் அனாதிப் பரம்பொருளைப் பற்றிச் சிந்தித்துப் பார்க்கும் உணர்வு மானுடருக்கு மட்டுமே உண்டு; எனவே, அவ்வகையில் மனித உணர்வு சிறந்தது.

அப்படியானால், மனித உணர்வு இறை உண்மையைப் பற்றிச் சிந்திக்கவேண்டும்; சிந்தித்தால்தான் அது மனித உணர்வு ஆகும். அப்படிச் சிந்திக்காமல் போனால், மனித உணர்வே ஆகாது. உயர்ந்த சிந்தனை எது? உயர்ந்த பொருளைப் பற்றிச் சிந்தனை பண்ணுவதே உயர்ந்த சிந்தனை. உயர்ந்த பொருள் எது? அழியாத பரம்பொருள், பேரின்பப்பொருள், இறையே உயர்ந்த பொருள்.

அந்த உயர்ந்த பொருளைப் பற்றிச் சிந்திக்கவிடாமல் காம உணர்வு உடலோடு கூடவே இருக்கிறது. காமத்தை வெல்லும் உபாயம் பிற உயிர்களிடத்தில் இல்லை. எனவே, அக்காம வேட்கையோடு கூடவே அவ்வுயிர்கள் அழிந்து போகின்றன. மனிதனைப் பொறுத்தமட்டில் அப்படி இல்லை. அவனுடைய அறிவைக்கொண்டு சிந்திக்கலாம். மொழியால் விளக்கக்கூடிய புறப்பொருள் நிறைந்த இந்த உலகத்திற்கு அப்பாலும் சென்று தன்னுடைய அனுபவ உணர்வை மௌனமாகிய மொழிகளால் விளக்கலாம்.

புறப்பொருள் நிறைந்த இவ்வுலகை விட்டுவிட்டு அப்பால் சிந்திக்க வொட்டாமல் தடுக்கக் கூடியது காம வேட்கை. ஐம்புல ஆசை காம வேட்கைக்கு ஆதாரமாக அமைகிறது. மெய், வாய், கண், மூக்கு, செவி—ஐம்பொறிகள். மெய் முதலிய ஐந்து பொறிகளாலும் அனுபவிக்கப்படும் அனுபவ உணர்வு ஐம்புலன்கள்.

என்றைக்கும் அவியாத காமம் என்னும் கொடிய நெருப்பை ஐம்புலன்களும் வளர்க்கின்றன. அக்காம நெருப்பால் கெட்டுப் போன மனம் சாம்பல் ஆகிக் கிடக்கிறது.

நாம் உலகில் மனிதப் பிறவி எடுத்திருக்கின்றோம். மனித உடல் நமக்கு வந்துவாய்த்துள்ளது. பொறிகளும் புலன்களும் நமக்கு மிகவும் இன்றியமையாதவை, எவ்விதக் குறைவும் இல்லாமல் அவை அமைந்திருத்

தல் வேண்டும். எந்தப் பொறியாவது குறை பாடு உடையதாக இருக்குமானால், மானிடப் பிறவி எடுத்ததன் பயன் கிடைக்காமல் போய்விடும்.

அப்படி எந்தப் பொறியாவது குறை பாடு உடையதாக ஆகி, அதனால் மக்களுக்கு மனிதப் பிறவி எடுத்ததன் நோக்கம் ஈடேறா மல் போய்விடக்கூடாது என்பதில் இயற்கை நியதி மிகவும் கவனமாக இருந்து வருகிறது.

அப்படியானால் என்ன பொருள்? ஒவ் வொரு பொறியும் அதற்கு என்று நிர்ணயிக் கப்பட்ட செயல்பாட்டிலிருந்து மீறிச்செல லக்கூடாது என்பதுதான்.

அவ்வாறு வரம்புமீறிப் போய்ச் செயல் பட்டால், வேதனைப் பட்டு, மனம் சாம்ப லாகிக் கெடும்.

''நின்தாள் வழுத்த நினைவு தந்து, மாறா நேயத்து இரவு பகல் மறவாது இருக்க வரம் அளித்தாய்!''

திருக்கருவையில் வாழ்கின்ற ஆதி அந் தம் இல்லாத பரம்பொருளே! உன் பாத மாகிய தாமரைகளை வணங்கவேண்டும் என் னும் உணர்வினை எனக்குத் தந்து அருளி னாய்! உணர்வு எல்லா உயிர்களுக்கும்உண்டு. மனித உணர்வு பிற உயிர்களுக்கு வாய்த் துள்ள உணர்வுகளில் எல்லாம் மிகவும் மேலானது. அம்மனித உணர்வும், இறை வனை நினைத்து, அவனுக்கு இடம்கொடுத்து எண்ணத் துவங்குகின்றபோது இன்னும் மேலான புனிதத்தன்மை பெறுகிறது. நமக் குச் சிந்திக்கின்ற ஆற்றலைத் தருபவன் இறைவன். இறைவனைப் பற்றி நினைக்கும் போதும், அவ் இறைவனுடைய திருவருள் துணையாலேதான் சிந்திக்கின்றோம். ''அவன் அருளாலே அவன்தாள் வணங்கி'' என்பது ஆன்றோர்களின் அனுபவ வாக்கு. ஆன்றோர் களைப் பற்றி எண்ணி, ஆன்றோர்களின் நெறிவழியே நடக்கின்ற அடியார் அதிவீர ராம பாண்டியருக்கு அவ் ஆன்றோர்களின் அனுபவ உணர்வு ஏற்படுகிறது. எனவே, ''நின்தாள் வழுத்த நினைவு தந்து'' என்று கூறுகிறார்.

மாறுபாடு ஏற்படாத உண்மையான அன் புடனே இரவும் பகலும் உன்னை மறக்காமல் இருப்பதற்கு வரம் அளித்துள்ளாய் எம் பெருமானே! அன்பு என்பது ஒரு குணம். குணம் நேரத்துக்கு நேரம் மாறுபாடு அடை யும். அன்பு என்னும் குணமும் நேரத் துக்குத் தகுந்தபடி மாறும். மனிதர்களி டத்திலே அன்பு கொள்கிறோம். மற்றவர் நம்மிடத்தில் அன்புகாட்டுவதற்கு ஏற்ற பிர காரம் நம்முடைய அன்பும் அமையும். மற்ற வர்களுடைய அன்பு மாறினால், நாம் காட்டு கிற அன்பும் மாறும். அது உலகத்தில் காணப்படும் பொதுவான உண்மை.

இறைவன் நம்மீது வைத்திருக்கும் அன்பு அளப்பரிய கருணையாகும். மனிதர்களிடத் தில், மற்ற உயிரினங்களின் இடத்தில் கொண்ட கருணையைஇறைவன் ஒருபோதும் மாற்றுபவன் அல்லன். நாமோ மற்ற உயிர் களோ இறைவன் மீது வைக்கின்ற அன்பின் எதிரொலியாக அவனுடைய கருணையில் மாற்றம் ஏற்படுவது இல்லை.

''இரவு பகல் மாறாது இருக்க வரம் அளித் தாய்!'' சிவனே, நின்னிடத்து யான் கொண்ட அன்பு, இரவு பகல் எப்பொழுதும் மாறாமல் நிலைத்து இருக்கும்படி, எனக்கு வரம் தந்தருளினாய்!''

''நினையாது ஒரு போதும் இருந்து அறி யேன்'' — என்று சிவபெருமானை நோக்கி இறைஞ்சுகின்றார் அடியார் ஒருவர். இரவு பகல் எந்நேரமும், எப்பொழுதும் இறை வன் திருவடிவம் அடியவரது மனத்தில் மாறாமல் இருக்கிறது. இறைவனை மறக்க வில்லை என்றால் நினைத்தேன் என்று சொல்ல வேண்டியதில்லை. கடவுளை நினைப்பதற்குக் காலம் நேரம் வேண்டியதில்லை. குறிப்பிட்ட கிழமைகளில் கோவிலுக்குப் போகவேண் டும் என்ற கட்டாயம் இல்லை.

மூச்சுவிடுவது எவ்வாறு அனிச்சைச் செய லாக நடைபெறுகிறதோ அதுபோன்று, இறைவனைப்பற்றிய உணர்வும் மனித உள் ளத்தில் தானாகவே அமைந்திருத்தல் வேண் டும் என்பது புலனாகிறது.

"சுடரே! வலியத் தடுத்துஆண்ட
துணையே! பிறவித் தொடுகுழிவீழ்
இடரே அகலக் களரநீழல்
இருந்த கோவே! எம்பெருமான்!

உடலே ஓம்பித் திரியும்எனை
உன்னை நினைக்கப் பணித்தஅருள்
கடலே! உனையன்றி ஒருதெய்வம்
காண வழுத்தக் கடவேனே?''

சுடர் வடிவான ஒளிப் பிழம்பே! வலிய வந்து என்னைத் தடுத்து ஆட்கொண்ட என் உயிருக்குத் துணையே! பிறவியாகிய ஆழமான குழியில் விழுந்து அடைகின்ற எனது துன்பத்தை அகற்றிடத் திருக்களா நிழலில் எழுந்தருளியுள்ள பெம்மானே! தலைவனே! அநித்தியமாகிய அழியக்கூடிய இவ்வுடம்பை, நித்தியம், என்றைக்கும் அழியாதது என்று தவறாக நினைத்துக்கொண்டு உடம்பைப் பேணிப் பாதுகாத்துக்கொண்டு திரியும் என்னை, உன்னையே நினைத்து நற்கதி அடையுமாறு ஏவிய கருணைக்கடலே! உன்னை அன்றி, வேறு ஒரு தெய்வத்தைக் காண்பேனா! இல்லை, மனத்தில்தான் நினைத்துப் பார்ப்பேனா! அதுவும் இல்லை.

தூய்மை கெடாதது நெருப்பு. தூய்மைப் படுத்துவது நெருப்பு. இருளை ஒழித்து, ஒளியைத் தோன்றச் செய்வது சுடர். இறைவனை ஜோதி என்பார்கள், சுடர் என்று போற்றுவார்கள், விளக்கு என்று துதிப்பார்கள்.

ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்கள் ஆன்மாவோடு பொருந்தியிருப்பதாகச் சொல்லுவார்கள். இம் மும்மலங்களைத் தவிர, எண்ணிறந்த மலங்கள் இருந்து ஆன்மாவின் ஞானத்தைத் தடுக்கின்றன என்றும் சொல்வார்கள்.

ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களும் பொருந்திய ஆன்மாக்கள் சகலர் என்று சொல்லப்படுவார்கள்.

கன்மம், மாயை என்னும் இரண்டு மலங்கள் மட்டுமே உடையவர்கள் விஞ்ஞானகலர் எனப்படுவார்கள். மாயாமலம் ஒன்றுமட்டுமே உடையவர் பிரளயாகலர் எனப்படுவர்.

சகலருக்கு இறைவன் விளக்கு வடிவாகக் காட்சி தருகிறான். விஞ்ஞானகலருக்குச் சுடர் வடிவமாக இறைவன் காட்சி அளிக்கிறான். ஜோதி வடிவினனாகப் பிரளயாகலருக்கு இறைவன் காட்சி கொடுக்கிறான்.

மும்மலங்களையும் உடையவர்தாம் அதிவீரராமபாண்டியர். வாழ்க்கையில் துன்பத்தை அனுபவிக்க அனுபவிக்க, வாழ்க்கை அனுபவங்களை உணர உணர, வாழ்வின் உண்மையைத் தெரியத் தெரிய ''நான்'' என்று சொல்கிற உடற் பற்றும், ''எனது'' என்னும் உலகப்பற்றும் அவரைவிட்டு மெல்ல மெல்ல அகலத் துவங்கின. எனவே, அந்நிலையில் ஆணவ மலம் அவரைவிட்டு அகலுகிறது. கன்ம மலம், மாயா மலம் என்னும் இரண்டு மலங்களையும் உடைய அவருக்கு இறைவன் ''சுடர்'' வடிவினனாகக் காட்சி தருகிறான். ஒளிப்பொருளாகிய இறைவன் அதிவீரராமபாண்டியரின் புறக்கண்ணையும் அகக்கண்ணையும் ஊடுருவி உள்ளே எழுந்தருளியிருக்கிறான்.

''வலியத் தடுத்து ஆண்ட துணையே!'' என்கிறார். உலகத்தில் வந்து பிறவி எடுப்பவர்கள், உலக பந்தங்களுக்கு உட்பட்டு உழலுகிறார்கள். இன்பம் அடையப் போகிறோம் என்று நினைத்துக்கொண்டே, துன்பத்தில் போய்ச் சிக்கிக்கொள்கிறார்கள். உலகத்தில் பிறந்தாலும், வினைகாரணமாக உடம்பு பெற்றுப் பிறவி எடுத்தாலும் பந்தங்களுக்கும், ஆசாபாசங்களுக்கும் ஆட்படாமல், உலகத்தில் இருந்தாலும் உலகத்தை மறந்து வாழ்ந்த மகான்களும் உண்டு.

அப்படி மறந்து வாழ முயலுகின்றவர்கள் ஒரு சாரார். தங்களுடைய உலகப்பற்றை விட்டுவிடுவதற்கு, எல்லாவிதப் பற்றுக்களும்இல்லாத இறைவனின்பாதங்களை அவர்கள் பற்றுகிறார்கள். வாழ்க்கையில் உழன்று இன்னல் அனுபவித்து, இனி, பட்டது போதும் என்ற முடிவுக்கு வந்தவர்கள் அவர்கள். ஆகவே, பற்று அற்ற இறைவனைப் பற்றுகிறார்கள். துன்பத்தில் அடிபட்டு, அனுபவித்து, இறைவனை வேண்டுவதால், அவ்வேண்டுதல், உண்மையான, உள்ளார்ந்த வேண்டுதலாக அமையும்.

தானாகவே முற்றும் உணரக்கூடிய இறைவன், இனிய வேண்டுதலுக்குச் செவிசாய்க்காமல் இருப்பானா? அடியவர்கள் அடையும் அளவற்ற வேதனையை அகற்றுவதற்கு, வலிய வந்து தடுத்து ஆண்டு அருள்புரிகிறான், உலகத்தில உள்ள எந்தத் துணை

யும் உண்மையான துணை ஆகாது. உட்லுக்குத் துணையாக இருந்தாலும், உண்மையான துணை ஆகிவிடாது. உயிருக்குத் துணையாக அமைவதே உண்மையான துணை ஆகும். இறைவன் உயிருக்குத் துணையாகிறுன்; இது ஆன்ருேர் அனுபவித்துக் கூறிய உண்மை. ''தந்தை தாயும் நீ என் உயிர்த்துணையும் நீ'' என்பது அனுபவித்துச் சொன்ன வாக்கு.

அதிவீரராம பாண்டியர் குறிப்பிட்ட வயதுக்குள்ளேயே, குறிப்பிட்ட காலத்துக்குள்ளேயே துன்பங்களே அனுபவித்தவர். துன்பங்களே விட்டு விலகுவதற்கு இறைவனே உண்மையான அன்புடன், உள்ளம் உருகிப் பிரார்த்திக்கின்ருர். அவருடைய பிரார்த்தனே சிவபெருமானுல் ஏற்றுக்கொள்ளப்படுவதாக அவர் உணர்கிருர். தன் மீது அளவற்ற கருணைப் பெருக்கை இறைவன் வைத்துப் பொழிவதாக உணர்ந்து, ''வலியத் தடுத்தாண்ட துணையே!'' என்கிருர்.

உயிர்களுக்கு இப்பிறவியில் வருகிற துன்பம் உடல் துன்பம். ஆனல், பிறவிதோறும் ஏற்படுகிற துன்பம் உயிர்த்துன்பம் ஆகும். துன்பங்களில் எல்லாம் மிகப் பெரிய துன்பம் எது? உடல் துன்பமாக இருந்தால் மருத்துவராலோ மருந்துகளாலோ போக்கிக்கொள்ளலாம். மனத்துன்பமாக இருந்தாலும், ஆறுதல் என்னும் மருந்தால் நீக்க முடியும்.

உயிர்க்கு வரக்கூடிய துன்பமாக இருந்தால், மருந்துகளால் நீக்க முடியுமா? மருத்துவர் போக்கிவிடுவாரா? ஆறுதல் உரை போக்கிவிடுமா? இவற்ருல் எல்லாம் முடியா. அம்பலத்தில் ஆடும் அருமருந்து அம்பலவாணன். அருமருந்து பேரின்ப வெளிக்குள்ளே இருக்கிறது. பிறவிப் பிணியை வேரறுக்கும் பிறவா யாக்கைப் பெரியோன் பொன்னம்பல நடராசன்.பிறவி நோயை ஒழிக்கும் வைத்திய நாதன் சிவபெருமான். பிறவி நோயே பெருநோய்; நீங்கா நோய். தொடர்ந்து வருகின்ற நோய்.

பிறவி எண்ணற்ற வகையில் வரும். ''எழு கடல் மணலே அளவிடில் அதிகம் எனது இடர்ப்பிறவி'' என்று பிறவி எண்ணிக்கையில் அடங்காததைக் கூறுவார்கள். போதும் இனி ஜன்மம் என்பதே ஆன்ருேரின் அனுபவம். எல்லாத் துன்பங்களுக்கும் மூலகாரணம் பிறவி நோயே ஆகும். பிறவித் துன்பம் ஒழிந்தால், எல்லாத் துன்பங்களும் ஒழிந்துவிடும்.

பிறவித் துன்பத்தை யாரால் ஒழிக்க இயலும்? பிறவியை நம்மால் ஒழிக்க முடியுமா? உறவினர் யாராவது ஒழித்துவிடுவார்களா? மனிதர்கள் யாராலும் ஒழித்துவிட முடியாது. ஏன்? பிறப்பது என்பது நமது கையில் இல்லை. பிறத்தல் என்பது அவரவர் கையில் இருக்குமானுல், அவரவர் விருப்பப்படி இருக்குமானுல், ஏழைகள் வயிற்றில் வந்து பிறப்பதற்கு யார் சம்மதிப்பார்கள்? உறுப்புக் குறைபாடுகளுடன் யாராவது பிறக்க விரும்புவார்களா? எனவே, உலகத்தில் பிறப்பது மனிதன் இஷ்டப்படி நடப்பது இல்லை. இறைவன் வகுத்த நியதிப்படி அமைவது பிறவி. நியதியை அமைத்தவனே நியதியை மாற்றவேண்டும். அவன் நினைத்தால் நியதியை மாற்றலாம்.

அப்படி, அதிவீரராம பாண்டியருக்கு நேர்ந்த விதியாகிய நியதியை மாற்றி,பிறவி நோயை ஒழிப்பதற்குத் திருக்களாமரம் என்னும் ஸ்தல விருட்சத்தின் கீழே அமர்ந்திருந்தான் பால்வண்ண நாதனுகிய சிவபெருமான். அதனே, ''களாநீழல் இருந்த கோவே!'' என்கிருர்.

''உடலே ஓம்பித் திரியும்எனே'' என்னுடைய உடலேயே சதா சர்வகாலமும் பேணினேன் என்கிருர். பொறி புலன்களுக்கு அடிமையாவதுதான் உடலே ஓம்புவதற்கு அடிப்படைக் காரணம் ஆகிறது.

''உடம்பினை முன்னம் இழுக்கென்று இருந்தேன்;
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்;
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே''

என்பது உடம்பைப்பற்றிய ஓர் எண்ணம். யாருக்கு? ஆன்ம லாபம் பெறவிரும்புகின்றவர்களுக்குஇவ் எண்ணம் நன்மையைத் தரும்.

ஆன்ம லாபத்தைக் கருதாதவர்களுக்கு வெறும் உடல் நன்மையாகவே, பௌதிக லாபமாகவே அமையும்.

# பேரின்பம்

(சுவாமி அசலானந்தர்)

எல்லா உயிர்களும் இன்புற்று வாழவே விரும்புகின்றன. ஒரு புலனறிவு பெற்றுள்ள உயிர் முதற்கொண்டு ஆறறிவு படைத்துள்ள மனிதஉயிர்வரை தத்தம் போக்கில் இன்ப நாட்டம் கொண்டு முயன்று, போராடி இன்பத்தைப் பெற்று, மகிழ்ந்து வாழ்கின்றன. வாழ்க்கையே போராட்ட மயம்தான். ஒருயிரைக் கொல்லாது அல்லது ஒடுக்காது மற்ற உயிர் வாழ முடியாது. இது இயற்கையின் மாறாத விதி.

அறிவு வளர்ச்சி குறுகியிருக்கும் சமயத்தில், மனம் விரிவடையாது குன்றியிருக்கும் தருணத்தில் போராட்டம் பெரிதாக இருக்கிறது. மேலும் சுயநலம்தான் மேலானது, சரியானது, அதுதான் சாத்தியம் எனத் தோன்றுகிறது. மன, அறிவு வளர்ச்சி ஏற்பட ஏற்படப் பரஸ்பரம் விட்டுக்கொடுக்க வேண்டும் என்றும், பிறரை அனுசரித்து அத்துடன் சுயநலம் மட்டும் கருதாது வாழ வேண்டும் என்றும் உயிர்கள் உணரத் தலைப்படுகின்றன. பரநலம் ஓங்க ஓங்கப் போராட்டமும் குறைகிறது; பிரச்னையும் குறைகிறது.

இனி, இன்பம் என்பது (1) சரீர சம்பந்தமாக, (2) மனோ அறிவு மயமாக, (3) புலன்களையெல்லாம் கடந்த நிலையில் உள்ள தன்மையதாக அமைந்திருக்கிறது. சரீர மயமாகத் தம்மை எண்ணி உயிர் வாழும் சிற்றுயிர்களுக்கு, ஐந்தறிவு படைத்தவைகளுக்குப் புலனின்பமே பிரதானம். அவை சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என ஐவகையான் உலகைப் பொருள்படுத்துகின்றன. புறப்பொருளைப் பற்றி இன்பத்தைப் பெறுகின்றன; பிறிதோர் உணர்வின்றி வாழ்கின்றன. மரம், செடி, கொடி போன்ற தாவர உயிர் வகைகள், தமக்கேற்ற சூரிய வெளிச்சத்தையும் உணவையும் பெறத் தம் கிளைகளையும் வேரையும் பரப்பி, நாடிப் பெறுகின்றன. வண்டு, தேனி, எறும்பு வகைகள் சுவை, ஊறு, நாற்றத்தால் இன்பத்தைப் பெற்றுத் திருப்தியுற்று வாழ்கின்றன. விட்டில் போன்ற பூச்சி வகைகள் சுவை, ஒளி, ஊறு, நாற்றம் ஆகிய நான்கு புலன்களால் இன்பத்தைப் பெற்று நிறை வாழ்வு வாழ்கின்றன. பறவைகளும் விலங்குகளும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐவகைப் புலன்களின் மூலம் இன்ப நாட்டம் கொண்டு வாழ்கின்றன.

இனி, மனித இனமானது ஐவகைப் புலனின்பம் பெறுவதோடு நில்லாமல் மேலும் அவாக்கொண்டு, அவைகளுக்கு மேல் இன்பம் பெறுவது எப்படி? என ஆராயும் தன்மையோடு இருந்து வருகிறது. ஆனால் சாமான்ய நிலையில் மனோ அறிவு வளர்ச்சி ஓங்கப் பெறாத மானுடர் ஐவகைப் புலனின்பங்களில் மட்டும் திருப்தியுற்று வாழ்கின்றனர். சரீர இன்பத்தைத் தவிர உயர்ந்த இன்பம், பேரின்பம் உண்டு என அறியாதவர்கள் அவர்கள்.

அடுத்தபடியாக, சிந்தனை சக்தி சற்றுத் தலையெடுக்கும்பொழுது, மனிதன் சரீர இன்பத்தோடு திருப்தியுறாது, புறப்பொருள்களைப் பற்றிய உண்மையை அறிய அவாக்கொண்டு புறப்பொருள்களை ஆராய்ந்து, அவைகளின் தன்மைகளைக் கண்டு ரசித்து மகிழ்கிறான். கலைஞானங்கள் அனைத்தும் இப் படித்தரத்தில்தாம் உருவெடுக்கின்றன. அத்துடன் அறிவு வளர்ச்சி காரணமாக இயல்பாக உள்ள சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றத்தின் பாங்கைப் பலவாறு பெருக்கி, பலவிதங்களில் அவைகளைப் பாகுபடுத்தி இன்பத்தை நுகர்கிறான். ஆக, சரீர சம்பந்தமான இன்பத்தோடும் மனம்,அறிவு சம்பந்தமான இன்பமும் ஒருசேர அந்நிலையில் நுகரப்படுகின்றன.

இனி, இன்பத்தை நுகரும் பொறிகளின் தன்மையை ஆராயலாம். கண், காது, மூக்கு, நா, மேனி என்பவைகளோடு மனதையும் சேர்த்துப் பார்த்தால், இவை தாமும் வரம்புக்குட்பட்ட நிலைவரை, குறிப்பிட்ட நேரம்வரைதாம், புறப்பொருள்களோடு தோய்ந்து, இன்பத்தை நல்குகின்

றன. தொடர்ச்சியான இன்பநிலையோ, ஒரே பாங்குடைய தன்மையோ எப்பொழுதும் இவை கொண்டிருப்பதில்லை; தாற்காலிகமான திகட்டலை, அதாவது போகத்தைத் தம்மால் ஏற்கமுடியாத தருணத்தில் வெறுப்பை வெளிப்படுத்துகின்றன. மேலும் இவைகளுக்குப் பொருட்களில், விஷயாதிகளில் விருப்பு, வெறுப்பு என்னும் தன்மை இருப்பதன் காரணமாகத் தனக்கொத்த நிலையில் விருப்பும், தனக்கொவ்வா நிலையில் வெறுப்பும் கொள்கின்றன. இதனல் இன்பமும் துன்பமும் மாறிமாறி எய்தப்படுகின்றன.

ஆக, நிலைத்த தன்மையோ சமநிலையோ பொறிகளுக்கு இல்லை. ஆதலின் மனம் உள்பட ஐம்பொறிகளும் சாசுவதமான, தடையற்ற இன்பத்தை நல்கா. ஆதலின் இத்தன்மையை அறிந்த மானிடர் ஐம்பொறிகள், மனம் இவைகளுக்கு அப்பால் இன்பம் பெறுவது சாத்தியமா? என ஆராய்ந்தனர். குறைபாடுடைய ஐம்பொறிகளைப் புறப்பொருள்களோடு தோயாமல் ஒடுக்கவும் செய்தனர்; மனதையும் அடக்கினர்; மனதில் எழுகின்ற எண்ணத்தையும் (விகல்பத்தையும்) அழித்தனர். அதன் விளைவாகப் புதியதோர் இன்பத்தைக் கண்டனர். அவ்வின்பமானது காணப்படும் இவ்வுலகிலுள்ள எதனேடும் தொடர்பு கொள்வதால் விளையும் இன்பத்தைக் காட்டிலும் மிகமிக உயர்ந்தது என்றும், அதற்கிடானது எதுவுமே இல்லையென்றும், அத்துடன் அந்நிலையில் பெறப்படும் இன்பத்தில் துன்பமெனும் எதிர்ச்செயல் நிகழ வாய்ப்பில்லை என்றும் உணர்ந்தனர். பேரின்பம் என்பது இதுவேயாம். இதனை அனைவரும் அடையலாம்; அடைவதே மனித வாழ்வின் மேலான இலக்ஷியம்.

ஆயினும் ஐம்பொறிகள், மனம் ஆகிய இவைகள் புறப்பொருள்களோடு கொள்ளும் தொடர்பைத் தடுப்பது என்பது எளிதில் அமைந்துவிடுவதில்லை. ஆகவே எளிதில் வாய்க்கிற பொறி, மன இன்பங்கள் குறையுடையனவாக இருப்பினும் அவைகளை விட்டுவிட யாருக்கும் விருப்பம் தோன்றுவதில்லை. இதனல் புலன்களுக்கு அப்பாற்பட்ட பேரானந்தப் பெருநிலையைப் பெறுதற்கு யாரோ சிலருக்குத்தான் சாத்தியப்படுகிறது. ஏனையோர்க்குச் சரீர, மன இன்பங்களைத்தாம் துய்க்கமுடிகின்றன.

இனி, மீண்டும் சரீர இன்பம் பற்றிச் சிறிது விரிவாக ஆராய்வோம். சாதாரணமாக மனிதர் யாவரும் தம்மைச் சரீரமயமாகவே கருதுகிறார்கள். எனவே தாம் பெற்றுள்ள சரீரம் நோயடையாது, துன்பப்படாது இருக்க அதற்கு வேண்டியவைகளை அளிக்கிறார்கள். எவ்வளவுதான் விழிப்போடிருந்து சரீரத்தைப் பாதுகாத்தபோதிலும் பிணி, துன்பம், மூப்பு என்னும் நிலைகளிலிருந்து தப்பிக்க முடிவதில்லை. சரீரம் ஓயாது வளர்ச்சி என்ற பெயரில் தேய்ந்து கொண்டே வருகிறது. ஆக்கை இடிகரையை நிகர்த்தது. சிறுவயதில், வளர்ச்சியடையும் பருவத்தில் சுறுசுறுப்பு, திட்பம் ஆகியவைகள் இருந்த போதிலும் பற்பல காரணங்களால் இடையிடையே நோய் வந்து தாக்கித்துன்புறுத்துகிறது. இளமைப் பருவத்தில் சரீரத்தின் மேன்மை முழுவதும் மிளிர்கிறது என்றாலும் சரீர உணர்வு மனதில் வலுத்துச் சிறிய துன்பங்கூட பெரிய வருத்தத்தை உண்டுபண்ணுகிறது.

மேலும், துயரத்தைப் போக்கும் முயற்சியில் ஏற்படும் பற்பல குறைபாடுகள், அறியாமையால் தீயதை நலமென எண்ணிச் செய்யும் செயல்கள்—இவைகளால் இயல்பாகவே தேயும் சரீரத்தை விரைந்து தேயும்படி செய்துவிடுகிறோம். அறியாமையால் சரீரத்திற்கு ஒவ்வாதவைகளை நல்குவதால், பற்பல பொருள்களுடன் பொறிகளைத் தோயச் செய்வதால் துன்பத்தை வலிந்து பெறுவதாக அமைந்துவிடுகிறது. எங்ஙனமெனில், சுவையில் நாட்டமுடையவன் சரீரத்திற்குத் தேவையற்றதையும், தன் மகிழ்வு காரணமாக அருந்துகிறான்; மிகைபட உண்ணுதல் என்னும் கேடும் அவனிடம் அமைகிறது. இதன் விளைவாகச் சரீரம் கேட்டைகிறது, சீர்குலைகிறது. இது போன்றே ஒளியில் நாட்டமுடையவன் டெலிவிஷன், திரைப்படம் போன்ற மிகை

பட்ட வெளிச்சத்தைக் கண்டு ரசிக்கிறான்; ஊறு இன்பத்தில் நாட்டமுடையவன் ஊறு இன்பத்தை விதவிதமான போக்கில் பெறுகிறான். இவ்வண்ணமே ஓசை, மணம் (நாற்றம்) என்னும் புலனின்பத்தையும் மிகைபட அனுபவிப்பதால் சரீரம் கேடடைகிறது. ஆக, சரீர இன்பம் சரீரத்தைக் கெடுக்கிறதே அன்றி அதனை மேன்மையுறச் செய்வதில்லை. மிதமாகப் புலனின்பம் பெற்று வாழ்ந்த போதிலும் இயல்பாகவே எல்லைக்கு உட்பட்ட பொறிகள், தேயும் இயல்புடைய பொறிகள் முடிவில் துன்பத்தைத் தருகின்றனவே அல்லாது தொடர்ச்சியான இன்பத்தை ஒருநாளும் நல்குவது இல்லை.

கடோபநிஷதம் கூறுவதாவது :

श्वोमावा मर्त्यस्य यदन्तकैतत् सर्वेन्द्रियाणां जरयन्ति तेजः।
अपि सर्वं जीवितमल्पमेव... ॥

ச்வோபாவா மர்த்யஸ்ய யதந்தகைதத் ஸர்வேந்த்ரி
யாணாம் ஜரயந்தி தேஜ:
அபிஸர்வம் ஜீவிதமல்பமேவ...

இந்திரிய சுகங்களெல்லாம் இன்றைக்கிருந்தாலும் நாளைக்கு அழிவனவேயல்லவா! மனிதனுடைய எல்லா இந்திரியங்களின் வலிமையையும் இவை அழிப்பனவல்லவா! எவ்வளவு நீண்ட வாழ்வாயினும் அது அல்பமே.

न वित्तेन तर्पणीयो मनुष्यो लप्स्यामहे वित्तमद्राक्ष्म चेत्त्वा ।

ந வித்தேந தர்பணீயோ மனுஷ்யோ லப்ஸ்யா
மஹேவித்தமத்ராக்ஷ்ம சேத்த்வா

மனிதன் ஒருபொழுதும் பொருளால் திருப்தியடையக்கூடியவனல்லன்.

கட். I. 26-27.

யயாதி என்னும் அரசன், தன் இளமைப் பருவம் மட்டுமன்றி தன் கடைசி மகனான பூருவின் இளமையையும் பெற்றுச் சரீர போகத்தை வேண்டியவாறு அனுபவித்த போதிலும் திருப்தி அடைய இயலவில்லை. புலனின்பம் திகட்டக் கூடியதே. எனவே, நீண்ட அனுபவத்திற்குப் பின் சரீர இன்பத்தின் நாட்டம் குறைந்து, மனிதன் பேரின்பத்தை நாடத் தலைப்படுகிறான்.

கலைஞானங்கள் பல கற்பதில், ஆராய்வதில், அவற்றைப் பிறர்க்கெடுத்துக் கூறுவதில் இன்பம் அமைகிறது. இவ்வின்பமானது சரீர இன்பத்தைக்காட்டிலும் ஒருபடி மேலானது என்றாலும் இடையிடையே சலிப்பு மனப்போக்கு ஏற்படத்தான் செய்கிறது. மனதும் நீடித்து ஒன்றினையே பற்றி நிற்கக்கூடிய தன்மை படைத்ததன்று; சலிக்கும் தன்மை படைத்தது.

மேலும் பற்பல எண்ணங்கள், சம்ஸ்காரங்கள் மனதில் தோன்றிக்கொண்டிருப்பது மன அலைச்சலை உண்டுபண்ணுகிறது. "योगश्चित्तवृत्तिनिरोधः ॥ யோகமெனப்படுவது, சித்தத்தின் விருத்திகளை ஒடுக்குதல் ஆகும்" என்று பதஞ்சலி மாமுனிவர் கூறுகிறார். எனவே எண்ணங்கள், சம்ஸ்காரங்கள், விருத்திகள் அற்றிருக்கும் நிலையே அமைதியின் இருப்பிடமாகும். இதனை நாம் நாடோறும் மயக்க நிலையில், ஆழ்ந்த உறக்கத்தில் துய்க்கிறோம். அறிவு வளர்ச்சி எண்ணங்களைப் பெருக்குகிறதேயொழிய எண்ணங்களை அடக்கப் பயன்படுவதில்லை. இதனால்தான் தாயுமானவர் கூறுவதாவது:

சும்மா இருக்கச் சுகம்உதயம் ஆகுமே;
இம்மாயா யோகம்இனி ஏன் அடா?—தம் அறிவின்
சுட்டாலே ஆகுமோ? சொல்லவேண் டாம்;கன்ம
நிஷ்டா; சிறுபிள்ளாய் நீ!

இம்மாயா யோகம்-மாயா காரியமாகிய இப்பிரபஞ்சத்தில் சேர்தல்; தம்அறிவின் சுட்டாலே ஆகுமோ-உலக அறிவைக் கொண்டு அதை அடைய முடியுமா?; கன்ம நிஷ்டா-வினையில் மூழ்கியவனே.

மனச்சாந்தியை நல்க அறிவு வளர்ச்சியால் இயலுவதில்லை. மனதில் சாந்தி இல்லாவிடில் இன்பத்தை நுகர முடியாது.

கடோபநிஷதம் கூறுவதாவது:

नायमात्मा प्रवचनेन लभ्यो न मेधया न बहुना श्रुतेन ।

வேதங்களைக் கற்பதாலோ, நுண்ணறிவினாலோ, விரிந்த கேள்வியாலோ இந்த ஆத்மா (பேரின்பம்) அடையப்படுவதன்று.

எனவே, பேரின்பத்தை அறிவு வளர்ச்சியால் நிச்சயமாகப் பெறவியலாது. புலன்களை அடக்கி, சரீர ஆசைகளை ஒழித்து, மனதில் தோன்றும் எண்ணங்களை அழித்தால்தான் பேரின்பத்தைப் பெறமுடியும். அவ்விதம் முயன்று பேரின்பத்தைப் பெறுவோமாக.

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-176

*971.* सुवासिन्यर्चन प्रीता ஸுவாஸின்யர்ச்சன ப்ரீதா—ஸ்வாஸிநிகளின் ஆராதனையில் மகிழ்வடைகிறவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

தன் கணவனோடு இனிது வாழ்ந்திருக்கும் மாது ஒருத்திக்கு சுவாஸிநீ என்னும் பெயர் வந்துள்ளது. வாழ்வு என்பது உயிர்வகைகளுக்கு அமைந்துள்ள நல்ல வாய்ப்பாம். ஒவ்வோர் உயிரும் அதனதன் நிலையினின்று பரிணமித்து மேல் நிலைக்குப்போக முயலுகிறது. அம்முயற்சிக்கு உறுதுணையாயிருப்பது அம்பிகையின் திட்டம். இனி, அம்பிகையின் திட்டம் வேறு, இயற்கையின் நடைமுறை வேறு அன்று. இயற்கையின்கண் தென்படுகின்ற நடைமுறைகள் அனைத்தும் அம்பிகையின் திருவுளப்பாங்கின்படி நிகழ்வனவாம். அத்திட்டங்களுள் முக்கியமான இடம்பெறுவது கணவனும் மனைவியும் இனிது சேர்ந்திருந்து நல்வாழ்வு வாழ்வதாம். நல்லியல்பு படைத்துள்ள மாது ஒருத்தியே தன் கணவனின் போக்கைக் குறிப்பால் அறிந்து அதன்படி நடந்துகொள்கிறாள். அத்தகைய மாது ஒருத்தியின் முக விலாசத்தில் தெய்விகம் திகழ்வது வெளிப்படை.

இங்ஙனம் நல்லியல்பும் கணவனோடு கூடிய நல்வாழ்வும் சேர்ந்து அமைந்துள்ள மாதர்கள் செய்கின்ற வழிபாட்டை அன்னை பராசக்தி மகிழ்வோடு ஏற்றுக்கொள்கிறாள். நல்லியல்பும் நல்வாழ்வும் சேர்ந்து அமைந்துள்ள இயற்கையின் பகுதிகள் அனைத்திலும் தெய்விகம் திகழ்வது வெளிப்படை என்பது இந்த நாமத்தின் உட்பொருளாம்.

*972.* आशोभना ஆசோபனா—அழகோடு கூடிய தெய்விகத்தை நிறைநிலையில் உடைத்திருப்பவள் என்பது இந்த நாமததின் பொருள்.

இயற்கையின் நடைமுறையில் ஒழுங்குப்பாடும் மங்களமும் நிறைந்துள்ளன. உயிர்வகைகளிடத்து அழகு இரண்டு பாங்குகளில் வெளியாகிறது. ஒன்று புறத்தில் அமைந்துள்ள மேனி அழகு. மற்றது அகததில் நிறைந்திருக்கும் சீலத்தினின்று வெளியாகின்ற அழகாம். இவைகளுள் மேனி அழகு இரண்டாந்தரமானது. சீலத்தினின்று பொலிகின்ற அழகே மெய்ப்பொருளிடத்திருந்து வருகிற மேலான அழகாம்.

இயற்கையை ஆராய்ந்து பார்க்குமிடத்து அதனிடம் அகம், புறம் என்று பாகுபடுத்த முடியாத பாங்கில் யாண்டும் அழகு பொலிந்துகொண்டே இருக்கின்றது. அப்பொலிவு அன்னையின் சான்னித்தியத்துக்குப் புறச்சான்றும். கடவுள் உண்டா என்னும் கேள்வியைக் கிளப்புபவர்கள் அக்கேள்வியின் வாயிலாகத் தங்கள் அறியாமையை வெளிப்படுத்துகின்றனர். மெய்ப்பொருள் இயற்கைத் தாயாக இலங்கிக்கொண்டிருக்கிறது. அந்த இயற்கையின்கண் உயிர்கள் வாழ்ந்து வருவதே அன்னையின் அருளுக்கு அத்தாட்சியாகிறது. அதினின்று வாழ்வுக்குரிய நலன் அனைத்தையும் பெற்று இனிது வாழ்ந்திருப்பதற்கிடையல்கடவுள் உண்டா என்னும் கேள்விக்கு இடமில்லை. நீரினுள் இனது வாழ்ந்துவரும் மீன் ஒன்று எங்கேனும் நீர் இருக்கிறதா என்னும் கேள்வியில் அமைந்துள்ள பொருந்தாமைக்கு நிகராம் கடவுள் உண்டா என்னும் கேள்வி. இயற்கையின் செயலைச் சரியாக அறிந்து கொள்கிறவர்களிடத்து இக்கேள்விக்கு இடமில்லை. பட்டப் பகலுக்கு நிகரானது இயற்கை முழுதிலும் பொலிந்து கொண்டிருக்கின்ற அன்னை பராசக்தியின் சான்னித்தியம். ஆதலால்தான் அவள் ஆசோபனா என்று போற்றப்படுகிறாள்.

*973.* शुद्धमानसा சுத்தமானஸா — தூய உள்ளம் படைததவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

மனது என்னும் அந்தக்கரணத்தின் துணைகொண்டு அகத்திலும் புறத்திலும் உள்ளவைகள் நுகரப்படுகின்றன. இக்கோட்பாட்டை அடிப்படையாக வைத்துக்கொண்டே இந்த்ரியாணும் மனஸ்சாஸ்மி — இந்திரியங்களுள் நான் மனதாக இருக்கிறேன் என்று கிருஷ்ணபரமாத்மா தம் விபூதிகளில் ஒன்

ருகிய மனதின் சிறப்பை எடுத்துச் சொல்கிறார். ஐந்து இந்திரியங்களுக்கும் ஆதிக்கம் தருவது மனது. நல்லுணவைப் புசிக்கும் மானுடன் ஒருவனுடைய மனதானது உண்ணும் செயலில் ஈடுபடாது வேறு ஏதேதோ பொருளற்ற எண்ணங்களை எண்ணிக் கொண்டிருப்பதற்கிடையில் உணவின் சுவையை அறியமாட்டாது. அதே விதத்தில் அரிய பெரிய விஷயங்களைக் கேட்டுக்கொண்டிருப்பதற்கிடையில் மனதானது எங்கேயோ அலைந்து திரிந்துகொண்டிருக்குமாகில்கேட்டதன் உட்பொருள் மனிதனுக்கு விளங்காது. இக்கோட்பாடு ஏனைய இந்திரியங்களுக்கும் பொதுவானது. மனது ஒவ்வோர் இந்திரியத்தோடும் இணைந்திருந்து செயல்புரிகின்றவிடத்தே அந்த இந்திரியத்தின் வாயிலாக மனிதன் அடைய வேண்டிய பயனை அடையப் பெறுகிறான்.

மனதை உடையவன் மனிதன் என்னும் கோட்பாடு வந்துள்ளது. மற்று, மனதோ ஒவ்வொரு மனிதனிடத்தும் ஒவ்வொரு பாங்குடையதாக இருக்கிறது. எத்தனை மனிதர்களோ அத்தனைவித மனது என்பது கோட்பாடு. மனது என்னும் கண்ணாடியின் மூலம் மனிதன் புறவுலகைப் பொருள்படுத்துகிறான். பச்சைக்கண்ணாடி போட்டுக்கொண்டு புறவுலகைப் பார்க்குமிடத்து அது முழுதும் பச்சையாகத் தென்படுகிறது. அதே விதத்தில் சிவப்புக்கண்ணாடி அணிந்து கொண்டு புறவுலகைப் பார்க்குமிடத்து அது சிவப்பு நிறம் உடையதாகத் தென்படுகிறது. மேடு பள்ளமாய் இருக்கும் கண்ணாடியைப் போட்டுக்கொண்டு புறவுலகைப் பார்த்தால் பொருள்கள் அனைத்தும் கோணலாகத் தென்படும். இங்ஙனம் மனிதன் பாங்குக்கேற்பப் புறவுலகக் காட்சி மனிதனுக்கு வந்து அமைகிறது.

கெட்ட மனமுடையவனுக்கு உலகம் முழுதும் கேடுடையதாகத் தென்படுகிறது. நல்ல மனமுடையவனுக்கு உலகம் முழுதும் நலன் நிறைந்ததாகத் தென்படுகிறது. பயிற்சியின் மூலம் மனிதன் கெட்ட மனதை நல்ல மனதாகத் திருத்தியமைக்கிறான். அப்படி அமைப்பதே வாழ்க்கையின் குறிக்கோளாம். 'மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்' என்பது முதுமொழி.

நல்வாழ்வில் ஈடுபட்டு நலனையே செய்து வரும் மனிதனுடைய மனது நல்லதாகத் திருந்தியமைகிறது. கெட்ட எண்ணம் கொண்டு கேட்டையே செய்து வருபவனுடைய மனது அரக்கத்தன்மை வாய்க்கப் பெற்றுக் கீழ்மையுறுகிறது. மனது திருந்தி அமைவதற்கேற்பப் புறவுலகின் காட்சி மேலானதாகத் தென்படுகிறது. உண்மையில் புறத்தில் பிரபஞ்சமாகக் காட்சி கொடுத்துக் கொண்டிருப்பது பரதேவதையாகிய அன்னை. மனம் திருந்தியமைகின்றவர்களுக்கு இவ்வுண்மை வெளியாகிறது. அன்னை பராசக்தி தானே சுத்த மனமுடையவளாக இருந்து உயிர்வகைகளுக்கு இந்த அரிய பாடத்தைப் புகட்டி வருகிறாள். மனது முற்றிலும் திருந்தி அமைபவன் முனிவன் அல்லது யோகியாகிறான். அத்தகையவன் காணும் காட்சி முழுதும் அகிலாண்ட கோடிகளைத் தோற்றுவித்துள்ள அன்னை பராசக்தியின் காட்சியேயாம்.

*974.* बिन्दुतर्पणसन्तुष्टा பிந்துதர்ப்பண ஸந்துஷ்டா — நல்ல பொருள் பிறர் நலனுக்காகப் படைக்கப்படும் செயலைக் குறித்து மகிழ்வடைபவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

இயற்கையின்கண்ணுள்ள சரம் அசரம், சேதனம் அசேதனம் ஆகிய யாவும் தத்தம் போக்கில் பரிபாகம் அடைந்து வருகின்றன. பரிபாகம் அடைந்துவரும் ஸ்தாவரம் ஒன்று நல்ல விதையாக வடிவெடுக்கிறது. விதைக்கு விந்து என்பது மற்றொரு பெயர். விந்து என்று சொல்வதும் பிந்து என்று சொல்வதும் ஒரே பொருளைக் குறிக்கின்றன. மனிதன் செய்கின்ற செயல்கள் அனைத்திலும் தலைசிறந்ததாய் இருப்பது தன்னைப் பிரம்மச்சரிய விரதத்தில் காத்துக்கொள்ளுதலாம். அதை முன்னிட்டே 'காப்பது விரதம்' என்னும் கோட்பாடு வந்துள்ளது. தன்னைத்தான் முற்றிலும் காத்துக்கொண்டவர்களுள் தலைசிறந்தவனாகத் திகழ்பவன் பீஷ்மாச்சாரியன். பண்பாட்டில் அந்த மானுடனுக்கு மேல் போனவர் யாருமில்லை.

போவதற்கு இலக்கும் ஒன்றும் இல்லை. அப்படி ஆற்றலிலே, அன்பிலே, அறிவிலே உயர் நிலை எட்டிய பீஷ்மன் எதையும் தனக்காக என்று வைத்துக்கொள்ளவில்லை. தன்னிடத்திருந்த எதையும் கேட்டவர் யாராயிருந்தாலும் கரவாது எடுத்து வழங்குவது பீஷ்மனுடைய கொள்கையாயிருந்தது.

தான் படைத்துள்ள நலன் அனைத்தையும் பிறருக்குப் பயன்படும்படி மகிழ்வுடன் எடுத்து வழங்குவது தர்ப்பணம் என்னும் பெயர் பெறுகிறது. பீஷ்மன் தன்னிடத்திருந்த அனைத்தையும் பிறர் நலனுக்கெனவே எடுத்து வழங்கி வந்தான். அவன் கையாண்ட அந்தத் திட்டம் உண்மையில் அன்னை பராசக்தியின் திட்டமேயாம். ஆகையினால்தான் ஆதிசக்தியாகிய அன்னையின் பெரிய திட்டத்தை மகிழ்வுடன் நிறைவேற்றி வந்ததன் விளைவாகப் பீஷ்மன் ஒப்புயர்வற்ற பெரிய மூர்த்தியானான். சரீரம் எடுத்துள்ள மானுடன் எச்செயலைச் செய்தால் மகோன்னத நிலையை அடைகிறான் என்பதற்குச் சான்றாக யாண்டும் பீஷ்மன் ஆதர்ச புருஷனாக இலங்கி வருகின்றான்.

அன்னையை முறையாக வழுத்த விரும்புகின்ற மானுடன் ஒருவன் பீஷ்மனுடைய பாங்கைப் பின்பற்றுவது முறையாகும். அன்னை பராசக்தியின் மேலாம் திட்டமாதலால் இத்திட்டம் உயிர்வகைகள் அனைத்திடத்தும் நிறைவேறி வருவதைக் காண்கிறோம்.

விருட்சம் ஒன்றின் பகுதிகள் அனைத்தும் பிறருக்குப் பயன்படுமானால் அவ்விருட்சத்தைக் கற்பகவிருட்சம் என்கிறோம். நமக்கிடையிலே தென்பட்டு வருகின்ற விருட்சங்களுள் இந்தப் பண்பைப் படைத்திருப்பது தென்னை மரம். அதன் எல்லாப் பகுதிகளும் பிறருக்குப் பயன்படுவனவாக அமைந்திருக்கின்றன. ஆதலால் தென்னை மரம் வைத்திருப்பவர்களுக்கு மகிழ்ச்சி. அவர்களோடு உறவாடுகிறவர்களுக்கும் மகிழ்ச்சி. தென்னையின் ஒவ்வொரு பகுதியும் பிந்துவாக மேலோங்கி வந்து பிறருக்குப் பயன்படுவதே அதன் பெருமைக்குச் சான்றாகிறது.

இனி, விலங்குகளுள் பசு ஒன்று அலாதியான ஸ்தானம் வகித்து வருகிறது. மலம், மூத்திரம் உட்பட அதன் உடலிலிருந்து வருகின்ற அனைத்தும் பிறருக்குப் பயன்படுகின்றன. ஆதலால் பசுவைக் காமதேனு என்று கூறலாம். அவ்விலங்கு செய்கின்ற செயலும் விந்துவைப் பிறருக்குப் பயன்படும்படி தர்ப்பணம் செய்வதாம்.

இங்ஙனம் அன்னை பராசக்தி தோன்றியுள்ள அனைத்தும் பண்பாட்டைந்து மற்றவர்களுக்குப் பயன்பட்டு வருவதில் பெருமகிழ்வு அடைகின்றாள். அன்னையின் இவ்வரிய செயலை அறிந்து பக்தன் ஒருவன் இந்தப் பாங்கிலே பிறருக்குப் பயன்பட்டு வருகிற பெருவாழ்வு வாழ்வானாகில் அவனுடைய செயல் ஒப்பற்ற அன்னையின் வழிபாடாகும்.

---

## நரியும் நாத்திகரும்

நரியொன்று திராட்சைத் தோட்டத்தினுள் புகுந்து ஆங்குக் கொடியில் கொத்துக் கொத்தாகத் தொங்கிக்கொண்டிருந்த திராட்சைப் பழங்களைத் தின்ன விரும்பித் தாவிக் குதித்துப் பறிக்க முயன்றது. ஆனால் திராட்சைக் குலை அதற்கு எட்டவில்லை. உடனே "சீ! சீ! இந்தப் பழம் புளிக்கும்" என்று தனக்குத்தானே சமாதானம் செய்துகொண்டு நரி தோட்டத்தைவிட்டு ஏமாற்றத்துடன் வெளியேறியது.

புலன்களுக்கு வசப்பட்டுள்ள நாம் புலன்களுக்கு அப்பாலுள்ள மெய்ப்பொருளை அறிவதற்கு நம் அறிவை வேண்டியவாறு பயன்படுத்துகிறோம். புலன்களுக்கு வசப்பட்டுள்ள அறிவுக்கு மெய்ப்பொருள் எட்டுவதில்லை. உடனே நமக்கு நாமே சமாதானம் செய்துகொள்கிறோம். "புலன்களுக்கு அப்பால் என்ன இருக்கின்றது! புலனின்பமே மேலானது" என்று கூறிப் பாரமார்த்திக உண்மைகளை அறிவதில் தோல்வியடைகின்றோம்; நாத்திகம் பேசித் திருப்தி அடைகின்றோம்.

---

# ஆத்ம போதம்

( திரு. V. S. நரசிம்மன் )

स्थाणौ पुरुषवत् भ्रान्त्या कृता ब्रह्मणि जीवता ।
जीवस्य तात्त्विके रूपे तस्मिन् दृष्टे निवर्तते ॥

स्थाणौ (ஸ்தாணௌ) மரக்கட்டையில் पुरुषवत् (புருஷவத்) மனிதனைக் காண்பது போல் भ्रान्त्या (ப்ராந்த்யா) மனக்கலக்கத்தால் ब्रह्मणि (ப்ரஹ்மணி) பரம்பொருளில் जीवता (ஜீவதா) ஜீவன் என்ற தன்மை कृता (க்ருதா) செய்யப்படுகின்றது. तस्मिन् (தஸ்மின்) அந்த நிலையில் जीवस्य (ஜீவஸ்ய) ஜீவனுடைய तात्त्विके रूपे (தாத்விகே ரூபே) உண்மையான தன்மையை दृष्टे (த்ருஷ்டே) பார்த்தால் निवर्तते (நிவர்த்ததே) நீங்குகின்றது.

"மரக்கட்டையை மனிதன் என எண்ணி மயங்குவது போல, பரம்பொருளை ஜீவன் என்று தவறாக எண்ணுகின்றான். ஜீவனுடைய உண்மையான நிலையை அறிந்தவுடன் மயக்கம் நீங்குகின்றது."

திருடன் இருட்டில் மரத்தைப் பார்த்துக் காவல்காரன் என்று பயந்து ஓடுகின்றான். இந்த அறியாமை ஜீவனிடம் குடிகொண்டுள்ளது. உள்ளது உள்ளபடி வஸ்துவை உணராது இருப்பதே மயக்கம், அஞ்ஞானம், மாயை, பிராந்தி. அம்மயக்கத்தினின்று மீள்வது எப்படி? பரத்தின் சத் சித் ஸ்வரூப லக்ஷணங்களை எளிதில் அறிய முடியாது. அப்படியே முயன்றாலும் அவை வெறும் சொல் ஜாலங்களே. அனுபவ பூர்வமாக உணரும் வரை அத்தகைய 'புத்தக ஞானம்' பயன் தராது. எனவே அதற்கு மாறாக ஜீவனின் உண்மை நிலையை ஆராய்ந்து பார்க்கஅறிவுறுத்துகின்றார். ஜீவன்சுக,துக்கமாகிய இருமைகளால் கட்டுண்டவன்; நிலையற்ற தன்மை உடையவன். உறங்கும்போது ஜீவபாவம் எங்கே போயிற்று? ஜீவன் சஞ்சலமே வடிவானவன். சுருதி மொழிகள், குருவின் உபதேசம் ஆகிய லட்சணங்களுக்கு முற்றிலும் வேறானவன். "ந ஹி அத்ருவேஷு, த்ருவம் ப்ராப்யதே — அசைந்து கொண்டே இருப்பதன் மூலம், அசைவற்றதை அடைய முடியாது." இங்ஙனம் ஜீவ லட்சணங்களை 'நேதி, நேதி—பரம்பொருள் ஸ்வரூபம் இது இல்லை' என்று தள்ளினால் மயக்கம் நீங்குகின்றது.

உபாதிகள் மூலம் சத்பொருளைத் தவறாகக் கருதுவது, அத்யாரோபம். விவேகத்தால், ஆத்ம விசாரத்தால் தவறைக் களைவது அபவாதம். வேதாந்த முறையைப் பின்பற்றி 'மரம்–மனிதன்' என்ற ஓர் உவமையைத் தந்துள்ளார். "கயிறு–பாம்பு, கிளிஞ்சல்–வெள்ளி"—என்ற எடுத்துக் காட்டுகளையும் வேதாந்த சாஸ்திரம் குறிப்பிடும்.

तत्त्व स्वरूपानुभवादुत्पन्नं ज्ञानमञ्जसा ।
अहं ममेति चाज्ञानं बाधते दिग् भ्रमादिवत् ॥

दिग् भ्रमादिवत (திக் ப்ரமாதிவத்) திசைகளை அறியாத மயக்கம் (நீங்குவது) போல், तत्त्व स्वरूप (தத்த்வ ஸ்வரூப) மெய்ப்பொருளின் உண்மை நிலையின் अनुभवात् (அனுபவாத) அனுபவத்தினால் उत्पन्नं (உத்பன்னம்) தோன்றிய ज्ञानं (ஞானம்) மெய்யுணர்வு अञ्जसा (அஞ்ஜஸா) உடனே अहं मम इति च (அஹம் மம இதி ச) நான் எனது என்ற अज्ञानं (அக்ஞானம்) அறியாமையை बाधते (பாததே) அழித்து விடுகின்றது.

"திசை மயக்கம் அனுபவத்தால் அழிவது போல், 'நான், எனது' என்ற அக்ஞானம் தத்துவ ஸ்வரூபத்தை அறிந்ததால் தோன்றும் அனுபவத்தால் உடனே அழிந்துவிடுகின்றது."

திசைகளைப் பல தட்வை அறிந்த போதிலும் குழப்பம் தோன்றுவது இயல்பே. அதுபோல் 'நான், எனது' என்ற அக்ஞானமும் அவ்வப்பொழுது எழும். அதை அகற்ற ஒரே வழி, பிரம்ம அனுபவத்தில் நிலைத்திருப்பதே. அத்தகைய அனுபவ நிலையை இங்கே எய்த முடியும் என்பதே வேதாந்த தத்துவத்தின் சிறப்பு ஆகும். 'தத்துவ சொரூபம்' என்பது பிரம்மத்தின் ஸ்வரூப லட்சணங்களைக் குறிக்கும். நித்ய, சுத்த, புத்த, முக்த ஸ்வபாவமே தத்துவ சொரூபமாகும்.

'நான்' என்ற அகந்தையை எப்படி அழிப்

பது? பரமஹம்சர் இரண்டு மஹா புருஷர்களின் உதாரணத்தைத் தருகின்றார். "நரேந்திரன் தனது அகங்காரத்தை மிகப் பெரியதாக்கிக் கொண்டான். அகண்ட ஸ்வரூபத்தை எட்டிய அந்த நிலையில் அவனைக் கட்ட மாயையால் இயலவில்லை. நாகமகாஷயர் தம்முடைய அகத்தை மிகவும் சுருக்கிக்கொண்டார். அணுவிலும் குறைந்த அளவு உடைய அகங்காரத்தைக் கொண்ட அவரைக் கட்டவும் மாயையால் முடியவில்லை!" பரப்பிரம்ம ஸ்வரூபத்துடன் தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்டு 'அஹம் பிரஹ்ம அஸ்மி' என்று பிரம்ம ஞானத்தில் திளைக்கும் ஞானியும், 'தவ தாச: அஹம்- நான் உனது அடிமை' என்று தனது ஜீவ வியக்தியை அடியோடு தொலைத்து இறைவனின் தாளைச் சரண் அடையும் பக்தனும் ஒரே நிலையில் உள்ளவர்கள். ஒரே நாணயத்தின் இரு பக்கங்களாகத் திகழ்கின்றனர். ஆணவத்தை அகற்றினால் ஞானம் தானே உதயமாகும் என்று பன்முறை கூறிய தத்துவத்தை அதன் முக்கியத்துவம் கருதி மறுமுறையும் விவரித்துள்ளார்.

सम्यक् विज्ञानवान् योगी स्वात्मन्येवाखिलं जगत् ।
एकं च सर्वमात्मानमीक्षते ज्ञान चक्षुषा ॥

अखिल जगत् (அகிலம் ஜகத்) எல்லா உலகங்களும் स्व आत्मनि एव (ஸ்வ ஆத்மனி ஏவ) தன்னிடத்திலேயே (இருப்பதை) सम्यक् (ஸம்யக்) நன்கு विज्ञानवान् (விக்ஞானவான்) அனுபவித்து அறிந்த योगी (யோகீ) யோகி ज्ञान चक्षुषा (ஞான சக்ஷுஷா) ஞானக் கண்ணால் एकं (ஏகம்) ஒன்றே ஆகிய सर्वं च (ஸர்வம் ச) எல்லாம் ஆகிய आत्मानं (ஆத்மானம்) ஆத்மாவை ईक्षते (ஈக்ஷதே) பார்க்கின்றான்.

"காண்பன அனைத்தும் தன்னிடத்தில் இருப்பதை நன்கு உணர்ந்த யோகி, ஞானக் கண்ணினால், ஒன்றாகவும், பலவாகவும் உள்ள ஆத்மாவைத் தரிசிக்கின்றான்."

'கடவுளைக் காண முடியுமா?' என்ற கேள்வியை நாத்திகர்களும் கேட்கின்றனர்; சாதகர்களும் கேட்கின்றனர். முதல்வகையினர் கேலியாக, ஏளனமாக, பிடிப்பற்ற பாங்கில் எழுப்பும் வினாவைச் சாதகன் தனது வாழ்வின் லட்சியமாகக் கொண்டு எழுப்புகின்றான். பார்த்தல், காணுதல் என்பது வெறும் ஊனக்கண்ணைக் கொண்டு அன்று என்பதை அவன் அறிவான். பொறி, புலன்களுக்கு அப்பாற்பட்டதாகக் கருதப் படும் பொருள் புலன் வசப்படுமாயின் அது சத்பொருள் அன்று. இதனைக் காண அகத்தே கண் திறக்கவேண்டும். எனவே கடோபநிஷத் 'ஆவ்ருத்த சக்ஷு: உள்முகமாகத் திறக்கப்பட்ட கண்' என்றும், கேன உபநிஷத் "யத் சக்ஷுஷா ந பச்யந்தி யேன சக்ஷூம்ஷி பச்யந்தி — எது கண்ணைக் கொண்டு பார்ப்பது இல்லையோ, ஆயினும் எதனால் கண்கள் பார்க்கின்றனவோ" என்றும் விவரிக்கின்றன. விசுவரூப தரிசனத்தைக் காட்டும் முன் ஸ்ரீ கிருஷ்ணன் கூறுகிறார்: 'இந்தக் கண்களைக் கொண்டு உன்னால் எனது தெய்வீக ஸ்வரூபத்தைப் பார்க்க இயலாது. எனவே தெய்வீகக் கண்களை— திவ்யம் சக்ஷு: — உனக்குத் தருகின்றேன். என் பெருமையைப் பார்" (அத்தியாயம் 11-8). பரமஹம்சரிடம் நரேந்திரன் "நீர் கடவுளைக் கண்டதுண்டா?" என்று கேட்டான். "ஆம் பிள்ளாய், உன்னை இப்போது பார்ப்பதைக் காட்டிலும் தெளிவாக மேலாக அவரைக் காண்கின்றேன்" என்று பதில் தந்தார். அதுபோல் யோகியின் பார்வை உலகோர் பார்வை போன்றதன்று; அது ஞானப் பார்வை என்று குறிக்க, 'ஞான சக்ஷுஷா' என்ற சொல் பயன்படுத்தப்படுகின்றது.

'ஞானக் கண்ணிருக்கும் போதினிலே, இந்த ஊனக்கண்ணால் உலகில் ஏதும் பயன் உண்டோ!' என்று பாடல் ஒன்று உள்ளது. கௌரவர் சபையில் கண்ணனைக் கட்ட முயன்றபோது, தம் விசுவரூபத்தை அவர் காட்டினார். கண் இழந்த திருதராஷ்டிரனும் அவர் அருளால் அக்காட்சியைத் தன் கண்களால் கண்டான். "உம் தெய்வீகக் காட்சியைக் கண்ட கண்கள் வேறு எதையும் காணவேண்டாம். என்னைப் பழையபடி குருடன் ஆக்கிவிடு" என்று அவன் வேண்டினான்.

ஞானியின் பார்வையும், ஏனையோர் பார்

வையும் மாறுபடும். கண்களுக்கு உடைய தாக (பரோக்ஷம்) நாம் காண்பதை யோகி புலன்களுக்கு அப்பாற்பட்டதாகக் (அபரோக்ஷம்) காண்கின்றான். இது வெறும் அறிவு அன்று. அனுபவத்தில் தோய்ந்த ஆத்ம போதம். எனவே 'விஞ்ஞானவான் யோகி' என்றார். கீதையில் 'ஞானம் விக்ஞானஸஹிதம் (9–1)' என்ற சுலோகத்தில் உள்ள பதத்திற்கு 'அனுபவ யுக்தம், அனுபவத்துடன் கூடியது' என்று ஆசாரியர் எழுதுகின்றார்.

யோகி உலகை எப்படிப் பார்க்கின்றான்? சர்க்கரையால் செய்யப்பட்ட பொம்மைகளில், குழந்தை யானையை, குதிரையைப் பார்க்கின்றது; பெற்றோர் சர்க்கரையைப் பார்க்கின்றனர். அதுபோன்று யோகி தோற்றத்தின் பின்னே உள்ள அதிஷ்டானத்தை, ஆதாரவை, ஆத்மாவைக் காண்கின்றான். ''ஈசா வாஸ்யம் இதம் ஸர்வம் — இவை அனைத்தும் பரம்பொருளால் பரவியிருக்கின்றன''; ''பார்க்கும் இடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற பரிபூரண ஆனந்தமே'' என்ற வரிகள் இதே கருத்தை உணர்த்துகின்றன.

आत्मैवेदं जगत्सर्वमात्मनोऽन्यन्न विद्यते ।
मृदो यद्वत् घटादीनी स्वात्मानं सर्वमीक्षते ॥

इदं सर्वं जगत् (இதம் ஸர்வம் ஜகத்) இந்த உலகங்கள் அனைத்தும் आत्मा एव (ஆத்மா ஏவ) ஆத்மா ஒன்றே. आत्मनः अन्यत् (ஆத்மன: அன்யத்) ஆத்மாவிற்கு வேறாக எதுவும் न विद्यते (ந வித்யதே) இல்லை. घट आदीनी (கட ஆதீனி) குடம் போன்றவை यद्वत् (யத்வத்) எவ்வாறு मृदः (ம்ருத:) மண் स्व आत्मान (ஸ்வ ஆத்மானம்) தனது ஆத்மாவாக सर्वं (ஸர்வம்) அனைத்தையும் ईक्षते (ஈக்ஷதே) பார்க்கின்றான்.

"இந்தப் பிரபஞ்சம் அனைத்தும் ஆத்ம சொரூபமே; ஆத்மாவைத் தவிர வேறு யாதும் இல்லை. மண்ணைக் காட்டிலும் வேறாகக் குடம் இல்லை. அதுபோன்று அனைத்தையும் ஆத்ம சொரூபமாகவே அவன் பார்க்கிறான்.''

'இருப்பது அனைத்தும் சத்பொருளே' என்ற தத்துவத்தை இரண்டுவிதமாக விவரிக்கின்றார். 'காணப்படுவது எல்லாம் ஆத்மாவே; ஆத்மாவிற்குப் புறம்பாக வேறு எதுவும் இல்லை' என்று முதல்வரியில் கூறப்பட்டுள்ளது. 'பாம்பாகக் காணப்படுவதும் கயிறுதான்; கயிற்றுக்குப் புறம்பாக வேறு எதுவும் இல்லை' என்பது போல், குடம், செம்பு, தட்டு எனப் பல நாமங்களில், வடிவங்களில் பொருள்கள் காணப்பட்டாலும் அனைத்தும் மண் தானே. ''வாசாரம்பனம் விகாரோ நாமதேயம்'' பெயர் உருவம் அனைத்தும் பேச்சளவில்தான். 'ம்ருத்திகா ஏவ சத்தியம்' மண் ஒன்றுதான் சத்தியமானது''—என்று உபநிஷத் அறிவுறுத்துகின்றது. 'காரண-காரியம்' என்ற ஆராய்ச்சியில் காரியம் காரணத்திற்கு அப்பாற்பட்டது அன்று எனக் கூறப்படும். மண்ணின்றிக் குடம் இல்லை என்பது போல், ஆத்மா இன்றிப் பிரபஞ்சம் இல்லை.

जीवन्मुक्तस्तु तद्विद्वान् पूर्वोपाधिगुणांस्त्यजेत् ।
सच्चिदानन्द रूपत्वात् भवेत् भ्रमरकीटवत् ॥

जीवन्मुक्तः (ஜீவன் முக்த:) ஜீவன் முக்தன் तत् (தத்) அப்பரம்பொருளை विद्वान् (வித்வான்) நன்கு அறிந்தவனாக पूर्व उपाधि गुणान् (பூர்வ உபாதி குணான்) இதற்கு முன் இருந்த உபாதிகளையும் குணங்களையும் त्यजेत् (த்யஜேத்) விட்டுவிடுவான். सत् चित् आनन्द रूपत्वात् (ஸத் சித் ஆனந்த ரூபத்வாத்) சச்சிதானந்த வடிவன் என்பதால் भ्रमर कीटवत् (ப்ரமர கீடவத்) குளவி-புழுப் போல भवेत् (பவேத்) ஆகின்றான்.

''பரம்பொருளை நன்கு உணர்ந்த ஜீவன் முக்தன் உபாதிகளை, குணங்களை விலக்கிவிடுகிறான். குளவியால் கொட்டப்பட்ட புழுவைப்போல், சத்சித் ஆனந்த சொரூபமாகிய நிலையை அடைகின்றான்.'' பரம்பொருள் சிந்தனை மனதைத் தூயதாக்குகின்றது. தூய மனதில் ஞானம் ஒளிர்கிறது. ஞானம் துக்கத்தைப் போக்கி ஆனந்தத்தை நல்குகிறது. ஞானத்தின் மூலம் வரும் ஆனந்தமே நிலையான ஆனந்தமாகும். எனவே பரம்பொருள் சிந்தனை நம்மை அகண்ட சச்சிதானந்தத்தில் ஒன்றாகக் கலக்கும்படி செய்கிறது.

# ஸத் ஸம்பாஷணை

கேள்வி: (347) *இரசமணியின் ஸ்பரிசம் பட்டதும் இரும்புவாள் தங்கவாளாக மாறுகிறது. இனி அது வெட்டப் பயன் படுவதில்லை என்று பகவான் ராம கிருஷ்ணர் தம் போதனையில் கூறுகிறார். இரசமணி என்பது யாது?*

இரசமணிக்கு மற்றொரு பெயர் ஸ்பர்ச வேதி. ஆங்கிலத்தில் இது The Philosopher's Stone என்னும் பெயர் பெற்றுள்ளது. இதன் உதவியைக் கொண்டு தாமிரம், இரும்பு போன்ற கீழான உலோகங்களைத் தங்கம், வெள்ளி ஆகிய மேலான உலோகங் களாக மாற்றியமைக்கலாம்.

இனி, பாரமார்த்திகப் பெருவாழ்வில் மானுடன் ஒருவன் பரஞானத்தைப் பெறு வானாகில் அவன் ஸ்பர்ச மணியால் அல் லது ஸ்பர்ச வேதியால் தீண்டப்பெற்றவன் என்று சான்றோர் அவனைப் பாராட்டுகின்ற னர். எஃகினால் செய்யப்பட்ட வாள் ஒன்று எதிரியை வெட்டுதற்கு நன்கு பயன் படுகிறது. ஆனால் அந்த வாள் தங்கவாளாக மாறியமைந்து விட்டால் அது வெட்டுதற்கு உதவாது. தங்கம் வேறு அரிய பெரிய காரியங்களுக்கு நன்கு பயன்படுகிறது. அதே விதத்தில் பரஞானம் அடையப்பெற் றவன் பிரபஞ்சத்தில் எவ்வுயிர்க்கும் தீங்கு செய்வதில்லை. அவனுடைய பெருவாழ்வு உலக மக்கள் அனைவருக்கும் நல்ல முறை யிலே மேலான துறைகளில் பயன்பட்டு வரு கிறது. இக்கோட்பாட்டை விளக்குதற்கே பரமஹம்சதேவர் இந்த உபமானத்தை எடுத்து வழங்கியுள்ளார். இந்த மேலான கோட்பாட்டை மறந்துவிட்டுப் பேராசை பிடித்த உலகத்தவர்கள் இரசமணியை நாடு தல் அல்லது இரசவாத வித்தைக்கு அலைந் திடுதலில் வீண்பொழுது போக்குகின்றனர்.

கேள்வி: (348) *நம் வீடுகளில் ஒரு துக் கம் ஏற்பட்டாலோ பேறு காலம் ஏற்பட் டாலோ சூதகம் என்று 16 நாட்களுக்குக் கோவிலுக்குள் போகக் கூடாது என்று கூறுகிறார்கள். அது சரிதானா?*

கடவுள் வழிபாட்டில் இரண்டு பகுதிகள் இருக்கின்றன. ஒன்று கர்ம காண்டம், மற் றது ஞான காண்டம். பக்தி காண்டம் ஞான காண்டத்தோடு ஒன்றுபட்டிருக்கிறது. உலக ஆசையில் உழலும் மக்கள் கர்ம காண் டத்தைப் பின்பற்றுகின்றனர். வீட்டில் யாராவது மடிந்துபட்டுப்போனால் அவ் வீட்டார் சில நாட்களுக்குக் கோயிலுக்குப் போகலாகாது என்னும் நியதி கர்ம காண் டத்தில் வந்திருக்கிறது. ஆனால் பக்தி மார்க்கத்தையும் ஞான மார்க்கத்தையும் கடைப்பிடிப்பவர்களுடைய கோட்பாடு இதி னின்று முற்றிலும் மாறுபடுகிறது. ஜன னத்தையும் மரணத்தையும் நிகராகக் கருது வது ஞானமார்க்கம். மரணம் போன்ற விபத்து ஒரு வீட்டில் நேர்ந்துவிட்டால் அப்பொழுதுதான் கடவுள் வழிபாட்டில் மக்கள் தீவிரமாக ஈடுபடவேண்டும். அதன் பொருட்டுக் கோயில்களுக்குள் பிரவேசிப்ப தும் அப்பொழுது அன்னவர்களுக்கு முற்றி லும் அவசியம் ஆகிறது.

என்றைக்கும் கர்மகாண்டத்துக்கும் ஞான காண்டத்துக்கும் இடையில் சமரஸம் காண்பது அரிது. கர்மகாண்டம் உலகப் பற்றை வளர்ப்பதாக இருக்கிறது. ஞான காண்டமோ உலகப்பற்றினின்று மனிதனை விடுவிப்பதற்கென்று அமைந்துள்ளது. எவ் வளவு விரைவில் சாதகன் ஒருவன் கர்ம காண்டத்தை ஒதுக்கிவிட்டு ஞான காண் டத்தைப் பின்பற்றுகின்றானோ அவ்வளவு விரைவில் அவன் வாழ்வில் மேன்மையடை வது திண்ணம்.

கேள்வி: (349) *செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா—என்னும் நூலில் செத்த வர்கள் நம்மோடு பேசுவதில்லை. அது வெறும் மனப்பிரமை (illusory experience) என்று கூறப்பட்டுள்ளது. சுவாமி யோகா னந்தர் (அமெரிக்காவில் இந்து மதத் தைப் பரப்பியவர்களில் ஒருவர்) தம் சுய சரிதையில் (Autobiography of a yogi) The Resurrection of Sri Yuketeswar என்ற தலைப்பில் தம் காலமான குரு தம் மகா சமாதிக்குப்பிறகுசுவாமி யோகானந்தரு*

*டன் பேசியதாகவும் இருவர் உரையாடலும் அந்நூலில் கொடுக்கப்பட்டுள்ளது. இது எங்ஙனம் சாத்தியமாகும்?*

இந்தச் சம்பவம் வெறும் கற்பனை. சரீரத்தை உகுத்தவர்கள் மற்றவர்களோடு பேசுகிற பாங்குடன் இருக்கிறார்கள் என்றால் தகுதி வாய்ந்த மேலோரிடம் வந்து பேசுவதுதான் முறைமை. மனத்தளர்ச்சியும் விவேகமின்மையும் உள்ளவர்களோடு வந்து பேசினார்கள் என்றால் அத்தகைய பேச்சில் பாராட்டத்தக்க பெரிய விஷயம் ஏதுமில்லை. இதினின்றே இத்தகைய பேச்சு மனக்கோளாறு பிடித்தவர்களுடைய கற்பனை என்பது வெளியாகிறது.

கேள்வி: (350) *கூடுவிட்டுக் கூடுபாய்தல் உண்மையா?—திருமூலர் இடையனுடைய உடலில் புகுந்தார் என்றும் அருணகிரிநாதருக்குக் கூடுவிட்டுக் கூடுபாயும் சக்தி இருந்ததாகவும் நவீன பேச்சாளர் ஒருவர் கூறுகிறார்.*

கூடுவிட்டுக் கூடு பாய்தல் யோக சித்திகளுள் ஒன்று. பரகாயப் பிரவேசம் என்னும் பெயர் பெற்றுள்ளது இந்த சித்தி. யோக சாதனம் புரிந்து யோகி அடைகின்ற சித்திகளுள் பரகாயப் பிரவேசம் ஒன்று. 'வேறு ஒரு சரீரத்திலும் புகுதலாம்' என்கின்றார் தாயுமானவர். பின்பு இந்தப் பரகாயப் பிரவேசத்தைப் பற்றிய கோட்பாடு ஒன்று ஆராய்ச்சிக்குரியதாம். ஒருவன் ஒரு சட்டையைத் தொடர்ந்து மூன்று நான்கு நாட்கள் அணிந்திருப்பானாகில் அவனுடைய வியர்வை நாற்றம் அந்தச் சட்டையினுள் கமழ்கிறது. அதன் அருகில் செல்லுவதே அருவருப்புக்குரியதாம். சட்டையைப்பற்றிய உண்மை இதுவென்றால் மலம், மூத்திரம் நிறைந்துள்ள பிறர் உடலில் புகுதற்கான ஹீனமான பான்மையை யோகி ஒருவன் எதற்காகக் கையாளவேண்டும்? கூடுவிட்டுக் கூடுபாய்தல் சாத்தியம் என்றாலும் விவேகிகள் அசுசியான இந்தச் செயலில் கருத்தைச் செலுத்த மாட்டார்கள். தனக்குச் சாத்தியமானவைகளிலெல்லாம் மனிதன் தன் வாழ்நாளைச் செலுத்தி வீண் போக்கலாகாது. உலகில் மனிதன் வாழ்ந்திருப்பது சிறிது காலத்துக்கே. அத்தகைய அற்ப ஆயுள் பூர்த்தியவதற்கு முன்பே பரமனுடைய அருளைத் தீவிரமாக நாடிப் பெறுவது சான்றோர் செயல். புலால் நாற்றம் செறிந்த பரகாயப் பிரவேசத்தைப்பற்றிச் சான்றோர் கனவிலும் கருதார்.

கேள்வி : (351) *தியானம் பண்ண முயலும்போது மனது சஞ்சலம் அடைகின்றது. மனதை ஒருமுகப்படுத்த என்ன செய்ய வேண்டும்?*

மனது சஞ்சலப்படுவதுதான் தியான முயற்சியின் முதல் அறிகுறியாகிறது. ஏனென்றால் தியானம் பண்ணும்பொழுது மனிதன் மனதிலுள்ள மற்ற எண்ணங்களை அகற்றி வைக்கிறான். கடவுள் எண்ணத்தை வரவழைக்க முயலுகின்றான். அதற்கிடையில் கிடைத்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி முன்பு எண்ணியிருந்த எண்ணங்கள் முளைத்துவர முயலுகின்றன. அப்படி அவைகள் இடுக்கண் விளைவிக்கின்ற பாங்கில் வருமிடத்து ஆத்ம சாதனம் பண்ணுகிறவன் அவைகளைக் குறித்துச் சஞ்சலப்பட வேண்டியதில்லை. அமைதியாகவும் பொறுமையாகவும் பொருந்தாத அந்த எண்ணங்களை ஒதுக்கி வைக்கவேண்டும்.

நல்ல சிறுவன் ஒருவனுக்கு நாம் ஏதாவது தின்பண்டம் வழங்க விரும்புகின்றோம். அப்பண்டத்தைப் பற்றிக்கொள்ள காக்கை, குருவி முதலியன வந்தால் அவைகளை விரட்டி ஓட்டுகின்றோம். அதே பாங்கில் பொருந்தாத எண்ணங்களைப் புறக்கணிப்பதும் பொருந்திய நல்ல எண்ணத்தை ஆர்வத்தோடு தோற்றுவிப்பதும் தியானப் பயிற்சியின் முதல்படியாம்.

எட்டிய—இறந்த காலத்தில் நாம் ஆர்வத்தோடு பேணிவந்த கருத்துக்கள் இடையில் நெடுங்காலம் மறைந்து பட்டுப்போயிருந்தாலும் தியான முயற்சியில் ஈடுபடுகின்ற பொழுது மறைந்து கிடந்த பழைய எண்ணம் திடீரென்று தோற்றத்துக்கு வருகிறது. அதைப் பொருட்படுத்தாதிருந்தும் அதற்கு உதாசீனமாக இருந்தும் பழகுதலே அதை விரட்டி ஓட்டுதற்கு உற்ற சிறந்த உபாயமாம்.

---

# ஸ்ரீமத் பாகவதம்

(சுவாமி ஸதானந்தர்)

வியாசர் பகர்ந்ததாவது: "தேவ ரிஷியே, தாங்கள் என்னைப் பற்றிப் பகர்ந்தவை யாவும் உண்மையே. ஆயினும் மனதில் திருப்தி ஏற்படவில்லை. அதன் காரணம் எனக்கும் விளங்கவில்லை. தாங்கள் பிரம்ம தேவரின் புதல்வர். எல்லையற்ற ஞானம் படைத்தவர். ஆகையால் தேவே, என் குறைபட்ட மனநிலையின் காரணத்தைத் தாமே ஆராய்ந்து சொல்வீராக. பரமபுருஷனைச் சதா வழிபட்டுவரும் தங்களுக்கு ஜீவர்களின் எல்லா மர்மங்களும் விளங்கும். இப்பிரபஞ்சத்தின் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரத்தின் காரண புருஷரும் காரண காரிய நியதியை நிர்வகித்து வருபவரும் ஆகிய அப்பரம புருஷரின் அருளுக்குத் தாங்கள் பாத்திரமாய் இருக்கிறீர். சூரியனைப் போன்று திரிலோக சஞ்சாரியாய் எங்கும் பிரவேசிக்க வல்ல வாயுவைப் போன்று ஜீவர்களின் உள்ளக் கிடக்கைகளை அறியவல்லவராய் உள்ள தங்களை என் நிலைமையை விளக்குமாறும் அதற்குப் பரிகாரம் கூறுமாறும் வேண்டுகிறேன். என் சாதனைகளின் மூலமாக நான் பிரம்ம சாக்ஷாத்காரம் பெற்றிருந்தும், சாஸ்திரங்களில் விற்பன்னனாய் இருந்தும் இரண்டின் பயனாக அமையவேண்டிய பரிபூரண சாந்தி பிரபோ, எனக்கு ஏன் வரவில்லை?"

நாரதர் பதில்அளித்ததாவது:"வியாசரே, ஜகத்ரக்ஷகனாகிய பரம்பொருளின் மகிமைகளையும், விபூதிகளையும், லீலைகளையும் சொரூபலக்ஷணங்களையும் நீர் விரிவாகவும் ஆழ்ந்தும் அனுசந்தானம் பண்ணவில்லை. மஹாபாரதத்தில் விரிவாக தர்மம் எது, அதர்மம் எது என்பதைப்பற்றியும் சமயம் சன்மார்க்கம் பற்றியும் தெளிவாக விளக்கி இருக்கிறீர்கள். கடவுளின் தத்துவங்களை விரிவாக நீங்கள் விளக்கவில்லை. கடவுளின் சொரூபலக்ஷணத்தில் மனம் மூழ்காமல் வெறுமனே அனுஷ்டானங்களைச் செய்வதில் பிரயோஜனமில்லை. அதில் பகவான் பிரீதி அடையமாட்டார்.

எவ்வளவு இலக்கிய நயமும் மொழி அழகும் அமைந்திருந்தாலும் கடவுள் புகழ் பாடாத சாஸ்திரம் என்ன சாஸ்திரம்? கீழான மனப்பான்மையும் சுயநலமும் வாய்ந்தவர்களுக்கு அவைகள் பிரியமானவையாக இருக்கலாம். காக்கைக்கு அழுக்கு நிறைந்த குட்டையும் சாக்கடையும்தாம் பிடிக்கும். ஆனால் அன்னப் பறவையோ ஹிமாசலத்தில் உள்ள தெள்ளத் தெளிந்த தூய நீர் நிறைந்த தேவ தேவதைகள் நீராடுகின்ற மானசசரோவரத்தில்தான் சஞ்சரிக்கும். வேறு எங்கும் அதைக் காண முடியாது. அதேபோன்று சாஸ்திரங்களில் குறிப்பிடப்படுகிற பரமஹம்ஸர்கள் எனப்படுகிற உயர்ந்த பாரமார்த்திக அனுபூதிமான்கள் எப்போதும் பெருநிலையில், கடவுளின் ஒப்பற்ற மகிமைகளில், பெருமையில் திளைத்திருப்பார்கள், குறையற்ற நிலையில் சாந்தியாய், திருப்தியாய், ஆனந்தமுற்று இருப்பார்கள். சிருஷ்டியின் குறைநிலைகள், அதன் விளைவுகள், பரிகாரங்கள் போன்ற விஷயங்கள் அவர்கள் மனதில் எழமாட்டா. இவ்வெண்ணங்களை அவர்களால் ஏற்கவே முடியாது. சிருஷ்டியில் குறைகாண்பது கீழான மனப்பான்மை ஆகும். இரண்டற்ற பொருள் பரிசுத்தப் பொருள். மங்கலமே வடிவெடுத்த பொருள் எங்ஙனம் தன்னைக் குறைநிலையில், அமங்கல நிலையில், பாபநிலையில், அதிருப்தி நிலையில் வைத்துக்கொள்ள முடியும்? ஆகவே கடவுளின் ஒப்பற்ற புகழையே ஒவ்வொரு சுலோகத்திலும் பாடுவீராக. அதுவே மனமாசுகளைப் போக்க வல்லது. சான்றோர் அவன் புகழ் கேட்டு, அவன் புகழைத் தியானம் பண்ணி அவன் புகழையே பாடுகின்றனர். அவன் நாமம் பதித பாவன - எல்லாப் பாபங்களையும் போக்க வல்லது. தவறான பாபங்களும், பேதங்களும் பேத உணர்வுகளும் அறவே அகன்றுபோன பிறகுதான் கடவுள் சாக்ஷாத்காரம் அமைகிறது. அப்படிப்பட்ட உயர்வற உயர் நலமான மேல்நிலையிலிருந்து

மனது சிறிது பிரபஞ்ச, பாஹிய உணர்வுக்குக் கீழ் இறங்கும்போது அதன் சோபை குன்றுகிறது. அப்படி இருக்க ஆசைகளால் தூண்டப்பட்ட காரியம் எப்படித் திருப்தியை நல்கும்? அது எங்ஙனம் உலகுக்கு நலன் விளைவிக்கும்? ஆசைப்படுதலும், ஏதோ ஆபத்தை எதிர்நோக்குதலும், அதற்குக் கருணையினால் பரிகாரம் தேடுதலும் பல படிகள் கீழே இறங்கின நிலை அல்லவா? ஆகையால் வேத வியாசரே, நீர் பழுதற்ற தீர்க்க தரிசனம் உள்ளவர், புகழ்மிக்கவர், சம, தம அனுஷ்டானங்களிலும் சத்திய பரிபாலனத்திலும் பரிபூரணர். ஆகையால் நீர் இப்பொழுது அப்பரம புருஷரான வாசுதேவரைத் தியானிப்பீராக. அவருடைய எல்லையற்ற அவதார மகிமைகளும் பூலோக லீலைகளும் உமக்கு உள்ளவாறு விளங்கும். அவைகளைப்பற்றியே பாடுவீராக. உம் சாஸ்திரத்துக்கு விஷயமாக அப்பரம் பொருள் ஒருவரேஇருக்கட்டும். அதைப்படிக்கிற மக்களின் பந்தங்கள் அறும், மோஹம் போகும். இதுதவிர உம்முடைய மனச் சாந்திக்கு வேறு வழியில்லை.மற்ற உமது எல்லாச் சாஸ்திரங்களும் கடலில் மேல் உள்ள அலை, சுழல், கொந்தளிப்பு, காற்றடித்தல் பற்றியவைகள் ஆகும். இது அப்பரம புருஷனின் கீழான பிரகிருதி ஆகும். நாமமும் ரூபமும் பேதமும் வெறும் தோற்றங்கள். கடவுளின் மேலாம் பிரகிருதியை, சொரூப லக்ஷணத்தை, புகழைப் பாடுவீராக.

மஹாபாரதத்தில் கீழான ஆசைகளினால் தூண்டப்பட்டுச் செய்யப்படுகிற நிஷித்த கர்மங்களையும் காரியங்களையும் வர்ணித்திருக்கின்றீர். அது கீழான இயல்பு படைத்தவனுக்கு அதை ஞாபகமூட்டிவிட்டது போன்று ஆகிறது. கீழான இயல்பு விழித்தெழுந்தால், ஊக்கம் பெற்றுவிட்டால் அவனுக்குச் சாஸ்திரத்தின் நல்ல போதனை ஏறாது. நல்லவர்களின் சொல் கேளான். தன் செயலுக்கு நல்ல நியாயம் கற்பித்துக் கொள்வான். வைத்தியன் கடவுளை நினைத்து இந்த மருந்தைச் சாப்பிடு என்று சொல்லி இருக்கலாம். அதற்குப் பதில் குரங்கை நினைக்காதே என்று பத்தியம் வைத்தான். அவனால் மருந்தே சாப்பிட முடியவில்லை. எதை விலக்க, உதறிஎறிய நினைக்கிறோமோ அதைப்பற்றி நினைக்கவேண்டாம், ஞாபக மூட்டவேண்டாம். ஆசையையும் அதன் கீழான செயல்களையும் ஒதுக்கவேண்டும் என்றுதான் நானும் பார்க்கிறேன். ஆனால் நீதிசாஸ்திரத்தையும் தத்துவ ஞானத்தையும் இணைக்க வேண்டாம். பரிபூரணமாகச் சீலத்தில் நிலைபெற்ற பிறகுதான் தத்துவ ஞானம் விளங்கும். பண்பு மிகக அவனுக்குக் கீழான போதனைகள் எதற்கு? காலதேச வர்த்தமானத்தைக் கடந்த நித்தியானந்தத்தை அவர்கள் அறிந்திருந்தார்கள். அவர்களின் மேலான நிலையை மற்றவர்கள் எங்ஙனம் மனதில் கிரகிக்க முடியும்? ஆகையால் சரீரபோதத்திலும் ஜீவபோதத்திலும் ஊறிக்கிடக்கின்ற ஜீவர்களில் சத்வகுணம் மேலோங்கப்பெற்றவர்களுக்குப் பயன்படும் வண்ணம் அப்பரம பிரபுவின் லீலாவிநோதங்களையும் தம் பெரிய நிலைக்கு என்றும் குறைவு வராவண்ணம் அவர் பூலோகத்தில் வாழ்ந்த விருத்தாந்தங்களையும் சொல்லுவீராக. தங்கள் தங்களுக்குரிய சம்பிரதாயமான ஆசாரங்களையும் விதிகளையும் அனுஷ்டிக்காதவனாய் இருந்தும் கடவுளிடத்து உண்மையான பக்தி இருக்குமாகில் அவர்கள் நிறைநிலை அடையாது மரணமடைந்தாலும் அவர்களையும் தீமை வெல்லாது. பக்தி இன்றி வெறும் ஆசார அனுஷ்டானங்களினால் மட்டும் ஒருவன் சுவானுபூதி அடைந்துவிட முடியாது. அருளாளர்கள் கடவுள் ஒருவரையே நாடுகிறார்கள். உலகப் பற்று நீங்காதவர்கள் கடவுளையும் உலகப் பொருள்களையும் மாறி மாறி நாடுகிறார்கள். அத்தகையவர்கள் ஒருநாளும் கடவுளை அடைய முடியாது. முன் ஜன்ம வினைப் பயனுக்கு ஏற்ப மனது புலன் இன்பங்களில் பிரவேசிக்கிறது. அதன் விளைவாக இன்ப துன்பங்கள் வந்தமைகின்றன. அதற்கு யாரையும் நோகவேண்டியதில்லை. இவ் இன்ப துன்பங்கள் நமக்கு நாமே செய்து கொண்டவைகள். முயற்சி உடையார் அவைகளை மாற்றிவிடுவார்கள். பக்தன் மறு ஜன்

மங்களில் எந்த வடிவம் எடுத்திருந்தாலும் அவன் உலக ஆசைகளால் கவரப்பட்மாட்டான். தேனீ தேனைமட்டும்தான் அருந்தும். உயிர் போவதாக இருந்தாலும் அது வேறு பொருள்களை அருந்தவே அருந்தாது. அதுபோன்று கடவுள் ஆனந்தத்தை ஒரு தடவையாவது அணுவளவாவது சுவைத்தவனால் ஒருநாளும் கீழான ஆசைகளைக் கொள்ள முடியாது. அவனால் அந்தத் திவ்ய ஆனந்தத்தை மறக்கவே முடியாது. இவ்வுலகம் ஸ்ரீ வாசுதேவரிடத்திலிருந்து தோன்றியது. ஆயினும் அப்பரம பிரபு இவ்வுலகுக்கு அப்பாற்பட்டவர். சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் ஆகிய கிருத்தியங்களை அவர் செய்கிறார். ஆயினும் அவர் கிருத்தியங்களைத் தாண்டியவர். இவை யாவும் தமக்கே முழுமையாகத் தெரியும். ஆயினும் இவைகளை உமது ஞாபகத்துக்குக் கொண்டுவந்தேன். நீர் ஸ்ரீ ஹரியினிடத்திருந்து தோன்றி வந்துள்ளீர். பிறப்பு இறப்புக்கு அப்பாற்பட்ட அப்பிரபு உலக நன்மையின்பொருட்டு உம்மைத் தோற்றுவித்துள்ளார். ஆகையால் கடவுளின் புகழையே விரிவாகப் பாடுவீராக. ஹரிபஜனம் மனதைத் தூய்மைப்படுத்தும். நன்மக்களுக்கு ஹரியின் புகழ் தியானத்திற்குரிய விஷயமாய் இருக்கிறது. மனது கடவுளையே நினைந்திருக்க உதவுகிறது. வேதத்தின் சாரமும், யக்ஞத்தின் பயனும், ஜபத்தின் பயனும் தானம், தவம் இவைகளின் பயனும் கடவுளை உள்ளபடி அறிதலே, உணர்தலே, நாடி அடைதலே ஆகும். ஆகையால் ஹரியின் புகழையே பாடுவீராக.

வியாசரே, என் முன் ஜன்மத்தில் நான் வேத விற்பன்னர்களான பிராம்மணர்களுக்குப் பணிப்பெண்ணாய் இருந்த மாது ஒருத்திக்கு மகனாய்ப்பிறந்தேன், ஒரு சாதுர்மாஸ்யத்தில் (மழைக் காலமாகிய நான்கு மாதம் ஒரே இடத்தில் இருந்து ஆத்ம சாதனங்கள் செய்தல், வேத ஆராய்ச்சி செய்தலுக்குச் சாதுர்மாஸ்யம் என்று பெயர்.) அந்த அந்தணர்கள் அனைவரும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் ஒன்றுகூடித் தங்கி இருந்தார்கள். அப்போது அந்த விப்ரர்களுக்குப் பணிவிடை பண்ணுவதற்கு அன்னை என்னை நியமித்திருந்தார்கள். பிள்ளைகளுக்கு இயல்பாயிருக்கிற வேடிக்கை, விளையாட்டுக்களை ஆட்ட பாட்டங்களையெல்லாம் அறவே விட்டுவிட்டு முழுமனதோடு மனப்பூர்வமான அன்போடு அந்தச் சான்றோர்களுக்கு நான் பணிவிடை செய்தேன். என்னிடத்து அனாவசிய பேச்செல்லாம் போய்விட்டது. நான் அடக்கத்தின் வடிவாய் இருந்தேன். அதன் விளைவாக அப்பெருமக்கள் என்னிடத்துப் பேர் அன்பு வைத்தனர். தங்களில் ஒருவனாகவே என்னைக் கருதினார்கள். ஒரு நாள் அவர்கள் உண்ட மீதங்களை அவர்கள் வட்டில்களிலிருந்து அவர்கள் அனுமதி பெற்று உண்டேன். அன்று என் பாபங்கள் எல்லாம் போய்விட்டன. பரிசுத்தனானேன். என் உள்ளத்தில் அருள்தாகம் ஊற்றெடுத்தது. அந்த ரிஷிகள் தினம் தங்களை மறந்து ஹரிபஜனம் செய்தார்கள். மனமாசுகளையெல்லாம் அகற்றவல்ல அந்தப் பரம பிரபுவின் சங்கீர்த்தனத்தால் என் உள்ளத்தில் ஸ்ரீமந் நாராயணனிடம் பேர் அன்பு, பக்தி உண்டாயிற்று. நாளடைவில் என் மனது தெளிவு பெற்றது. யாரும் ஓதாது கடவுள் அறிவு தானே என்னிடத்து அவன் அருளாலே தோன்றலாயிற்று. நான் ஆத்மா, சரீரம் அன்று. நான் பிரம்ம ஞானி, ஜீவன் அன்று. மாயையினால் ஜீவர்கள் தாம் எடுத்துள்ள சரீரங்களைத் தங்கள் மயமாகக் கருதி உலகில் உழல்கின்றனர். மறைத்தலும் அருளலும் அவருடைய அருட்கூத்து. சாதுர்மாஸ்யத்தில் திரிசந்தியா வேளைகளிலும் (காலை, நண்பகல், மாலை) முறையாக அப்பரம புருஷனின் திருப்புகழ் பாடினார்கள். அந்தத் திவ்வியப்பிரபந்தத்தை நாள் தோறும் கேட்டதால் நான் தன்யனானேன். தாமஸ, ரஜோகுண இயல்புகள் மாறி சத்வ குணம் மேலோங்கப் பெற்றேன். சாது சேவை, சாது சங்கம் ஆகியவை மகிமை உடையவையாகும். பணிவுடனும் அன்புடனும் நான் அவர்களுக்குப் பணிவிடை பண்ணினேன்.

சாதுர்மாஸ்யம் முடிந்து அவ்வுத்தமர்கள் தங்கள் தங்கள் இடங்களுக்குப் புறப்படு

டார்கள். அவர்கள் இயல்பாகவே தீனர்களி டத்தும் குணஹீனர்களிடத்தும் அன்புடை யவர்கள். அவர்கள் என்னிடத்துப் பேரன்பு கொண்டு எனக்கு உபதேசம் செய்தார்கள். அப்பரம புருஷனிடம் அவர்கள் அறிந்து கொண்ட பிரம்மஞானத்தை எனக்கு ஊட்டி ஞர்கள். நான் எவ்வளவோ பாக்கியம் செய் தவன் ஆனேன். என் சொந்த முயற்சியால் இதை அடையவல்லேனே? கடவுளைப்பற்றி யும், மாயையைப் பற்றியும் நான் அறிந்து கொண்டேன். "மாயாவுலகம் இல்லையேல் மற்று எனக்கு ஓர் பற்றும் இல்லை. நீயே நான் என்று வந்து நிற்பேன் பராபரமே" என்பது ஆன்றோர் வாக்கு. பற்று, ஆசை, அகங்காரம் அற்ற ஜீவன் அப்பரம புருஷனே ஆகிவிடுகிறுன். அவரிடம் ஐக்கிய மாகிவிடுகிறுன். அத்யாத்மிகம் (மனவேதனை கள்) ஆதிபௌதிகம், (சரீர வேதனைகள், பஞ்சபூதங்களால் ஏற்படும் துன்பங்கள்) ஆதிதெய்விகம் (விபத்து அல்லது தெய்வ சக்திகளால் ஏற்படும் கஷ்டங்கள்) ஆகிய மூன்று விதக் கஷ்டங்களினின்று விடுபடுவ தற்கு நிச்சயமான நல்லவழி இப்பிரபஞ் சத்தை எல்லாம் இயக்கிவரும் பிரபுவாகிய ஸ்ரீ ஹரியினிடத்துச் சரணடைதலே ஆகும். சர்வ கர்மங்களையும் அவருக்கு அர்ப்பணித் தலே ஆகும். இனிப்பை அதிகம் சாப்பிட் டாலோ இனிப்பை ஜீரணிக்கிற சக்தி குறைந்து போனலோ உடலுக்குச் சர்க்கரை வியாதி வருகிறது. சர்க்கரை வியாதிக்காரன் இனிப்புச் சாப்பிடுதலைத் தவிர்த்தும் மாவுப் (starch) பண்டங்களைத் தவிர்த்தும் சாப்பிடு கிறுன். அவனுக்குச் சிலவேளைகளில் இனிப்புச் சத்து ரத்தத்தில் போதாமையினுல் மயக்கம் வரும். அந்த வேளையில் அவன் உடனே ஏதா வது இனிப்புச் சாப்பிடவேண்டும். அத்தகைய வர்கள் தங்கள் கைவசம் எப்பொழுதும் சாக் லெட் போன்ற இனிப்புப் பண்டம் வைத்தி ருப்பார்கள். எதை முன்விட்டு அவர்களுக்கு நோய் வந்ததோ அதுவே ஒருவேளையில் அவர்களுடைய வியாதிக்கு மருந்துமாகிறது. அதுபோன்று பந்தபாசங்களுக்கும் பிறப்பு இறப்புக்கும் காரணமாகிய கர்மங்கள் கட வுளுக்கென்றே செய்யப்படும்பொழுது, அகங்கார மமகாரமற்று ஆசையின்றிச் செய்யப்படும்பொழுது அதுவே பந்தவிமோ சனம் ஆகிறது. கர்மபந்தத்தையும் பிற வித் தளையையும் போக்குகிறது.

[ஹனுமானும் பீஷ்மரும் செய்த கிருத்தி யங்கள் அளவற்றவை. அவை அவர்களைப் பந்தப்படுத்தவில்லை. ராம, கிருஷ்ண லீலை யைச் செய்தார்கள். அவர்களிடம் கர்த்ருத் வம் இல்லை; அகங்காரம் இல்லை; எல்லாம் பகவான் செயலே எனப் பாவித்தார்கள்.]

கடவுளின் பிரீதிக்காக என்று செய்யப் படும் கர்மங்கள் பக்தியை வளர்க்கின்றன. பக்தி படிப்படியாக ஞானத்தை வளர்க் கிறது. ஆகையால் மனமே நீ எப்போதும் ஸ்ரீவாசுதேவர் புகழ்பாடு. அவன் திருநாமம் எப்போதும் உன் நாவில் இருக்கட்டும். இவைகளையெல்லாம் புரிந்து கொண்டவனே ஞானி. அவன் எப்போதும் இங்ஙனம் தியானிக்கிறுன். இப்பேருணர்வில் நிலைத் திருக்கிறுன், மஹா பிரபுவாகிய ஸ்ரீவாசு தேவரின் திருவடிகளை வணங்குகிறேன்; தஞ்சமடைகிறேன். அவருடைய தெய்வீகத் தோற்றங்களாகிய பிரத்யும்னர், அனிருத் தர் இவர்களையும் வணங்குகிறேன். பகவா னின் ஆயிரக்கணக்கான திவ்விய நாமங் களில் சில, மந்திரங்கள் எனப்படுகின்றன. அவைகளில் ஒன்றைப் பக்தன் உறுதியாக ஜபித்து தியானித்து அதிலேயே லயித்திருக் கிறுன். வியாசரே, இந்த வழிகளையே நான் கடைப்பிடித்தேன். அவன் அருளால் அவன் தாள்களில் மாறுதபக்தியும்ஞானமும்வாய்க் கப்பெற்றவனுய் இருக்கிறேன். நீவிர் அங் ஙனமே இந்த ஜகத்துக்கு நாயகனுகிய வாசு தேவரின் ஒப்பற்ற முடிவில்லாத திருப் புகழை, திவ்வியப்பிரபந்தத்தைப் பாடு விராக. புத்திமான் கடவுளில் லயிக்கவே விரும்புகிறுன். அவனுக்கு வேண்டியது கட வுள் ஒருவரே. வியாசரே, மக்களிடத்துப் பேர் இரக்கம் கொண்டீர். அது மிகவும் நன்று. அவர்கள் உய்வதற்கு ஒரேவழி அவர் கள் மனதைக் கடவுளிடத்துத் திருப்புவதே யாகும். மானுட வாழ்வின் முடிவில்லாத துயரங்களுக்கு ஒரே பரிகாரம் பக்தி, கடவுள்ஸ்மரணை ஒன்றே ஆகும்.

# விவேகானந்தரின் சிந்தனைகள்

[ திருச்சி வானொலி நிலையத்தில் 6—1—83 அன்று ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர் அவர்கள் நிகழ்த்திய உரை ]

கல்வி:

மனதைக் கல்லுதல் கல்வி எனப்படும். பூமியைக் கிளறி, பூமியினுள் புதைந்து கிடக்கும் கல், முள் முதலியவற்றை எடுத்துப் பூமியைப் பண்படுத்துவதுபோன்று, மனதைக் கிளறி, மனதினுள் புதைந்து கிடக்கும் குற்றங்களைக் களைவது கல்வி எனப்படும். மனதில் உள்ள குற்றங்கள் எல்லாம் களைந்து எடுக்கப்பட்டுவிட்டால் மனது மாண்புடையது ஆகிறது. மனிதனை மாண்புடையவனாகச் செய்வது கல்வி ஆகும். கல்வியின் இவ்வுயர் லட்சியம் இன்றைக்கு மறைந்துபோய்விட்டது. இன்றைக்கு நம் நாட்டில் அமைந்துள்ள கல்விச்சாலைகள் இவ்வுயர்ந்த லட்சியத்தை வளர்ப்பவை அல்ல. எழுதப் படிக்கத் தெரிந்தவர்களைப் பெருவாரியாக ஆயத்தப்படுத்துவதே அவைகளின் நோக்கமாக இருந்து வருகிறது. இனி அவைகளையெல்லாம் அடியோடு திருத்தி அமைப்பதற்கு நம் நாட்டு அறிஞர்கள் முன்வரவேண்டும். கல்வி சம்பந்தமாகச் சுவாமி விவேகானந்தருடைய கருத்துக்கள் சிலவற்றைக் காண்போம்.

வெறும் ஏட்டுக்கல்வி கல்வியாய்விடாது. விஷயங்களை மூளையில் திணித்து வைத்து இருப்பதால் ஒருவன் கல்விமான் ஆகிவிடமாட்டான். சுயமாகச் சிந்திப்பதற்கும் செயல்படுவதற்கும் கல்வி வழிகாட்டித் தரவேண்டும். கல்வி ஒருவனிடத்துத் தன்னம்பிக்கையை வளர்க்கவேண்டும். கல்வித் திட்டத்தில் மனத்தூய்மைக்கும், மன ஒருமைப்பாட்டிற்கும் வழி வகுக்கவேண்டும். பண்டைக் குருகுல முறையில் மனதைத் தூய்மைப்படுத்துவதும் மனதை ஒருமுகப்படுத்துவதும் சீரிய முறையில் நடந்து வந்தன. இயற்கைச் சூழ்நிலையும், தவ வாழ்வும் சான்றோர்கள் கூட்டுறவும் பண்டைய குருகுல முறையில் இடம்பெற்றிருந்தன. முனிவர்கள் குலபதிகளாக இருந்து வந்தார்கள். அவர்கள் சீலமே வடிவெடுத்தவர்களாக இருந்தார்கள். தீயைச் சாரும் விறகுக் கட்டை தானே தீ மயமாய் ஆவது போன்று, தூய மனம் படைத்த குலபதியைச் சார்ந்து வாழ்ந்த மாணாக்கர்களுக்குத் தூய நிலை தானே வந்தடைந்தது. அத்தகைய குருகுல வாசம் தற்காலத்துக்கேற்ற முறையில் புதுப்பிக்கப்பட வேண்டும்.

எத்தகைய கல்வி நல்லொழுக்கத்தை உருவாக்குமோ, மன உறுதியைத் தருமோ, பரந்த அறிவைத் தருமோ அத்தகைய கல்வி தான் நமக்குத் தேவை.

நவீன பௌதிக விஞ்ஞானம் கல்வியில் இடம்பெறவேண்டும். பௌதிக விஞ்ஞானம் பௌதிக உலகைப் பற்றியதாகும். உலகத்தின் பெருமைகளையும், மர்மங்களையும் அறிந்தால்மட்டும் போதாது. மனத்தகத்து உள்ள மாண்பையும் அறிந்து கொள்ள வேண்டும். மனிதன் தன்னை மேலோன் ஆக்கிக்கொள்ளாததனால் பல கேடுகள் தோன்றி வருகின்றன. இன்றைய உலகில் அக்கேடுகளை நாம் காண்கின்றோம். மனதிலுள்ள மாசைக் களைந்தவர்கள் ஆசிரியர்களாக இருக்கவேண்டும். தற்கால ஆசிரியர்கள் பாடம் சொல்லிக்கொடுப்பதோடு தங்கள் வேலை முடிந்து விட்டதாக நினைக்கிறார்கள். மாணாக்கனுடைய மனதில் உள்ள மாசைப் போக்குவதற்கு வெறும் பாடம் புகட்டுவது மட்டும் போதாது. ஆசிரியர்களின் வாழ்க்கை மாணாக்கர்களுக்கு முன் மாதிரியாய் அமைய வேண்டும். போகத்தையும், சுக ஜீவனத்தையும் குறிக்கோளாகக் கொண்டிருப்பவர்கள் கல்வித்துறையில் சீரியபணி ஆற்றமுடியாது. அடக்கமும், ஒழுக்கமும், எளிமையும் சீரிய வாழ்வும் உடையவர்களே ஆசிரியர்கள் ஆவதற்குத் தகுதி வாய்ந்தவர்கள். அவர்கள் மூலமாகத்தான் கல்வியின் லட்சியம் நிறைவேறும்.

கல்விக்காகக் கோடிக்கணக்கான பணம் செலவிடப்படுகிறது. கல்விக்காக அமைந்திருக்கும் தற்காலப் பல்கலைக் கழகங்கள் எதைச் செய்து சாதித்திருக்கின்றன? சுயமாகச் சிந்திக்கும் ஒரு மனிதனையாவது

அவை இதுவரை உண்டாக்கவில்லை. அவை தேர்வுகளை நடத்தும் நிறுவனங்களாக மட்டும் இயங்கி வருகின்றன. இப்பல்கலைக் கழகங்களிலிருந்து வெளியேறுபவர்கள் தங்களைத் தாங்களே காப்பாற்றிக்கொள்வதற்கு வழிதெரியாமல் திண்டாடுகிறார்கள். இனி இவர்கள் பொதுமக்களுக்கு என்ன செய்யப் போகிறார்கள்? பொது மக்கள் பணத்தைக் கொண்டு கல்வி கற்ற பட்டதாரிகள் மேலும் பொதுமக்களுக்குச்சுமையாகவேஇருந்துவருகிறார்கள். இந்நிலை மாறியமைய வேண்டும்.

மனதுக்குள் மறைந்து கிடக்கும் பூரணத் தன்மையை வெளிப்படுத்தும் கல்வியே உண்மையான கல்வி ஆகும். அத்தகைய கல்வியைத் தூய வாழ்க்கை மூலமாகவும் தன்னலமற்ற பணிவிடை மூலமாகவுந்தான் பெறமுடியும். தூயவாழ்வும் தன்னலமற்ற சேவையும் மனத்தெளிவை உண்டுபண்ணுகின்றன. மனத்தெளிவு பெறுகின்றவர்கள் உண்மைக்குத் தலைவணங்குகிறார்கள். உண்மைக்குத் தலைவணங்கும் உத்தமர்களை உண்டாக்கும் கல்வியே நமக்குகந்த கல்வியாகும். கல்வியைப் பற்றி விவேகானந்தர் கொண்டிருந்த இக்கருத்துக்களையெல்லாம் நடைமுறைக்குக் கொண்டுவரும் நற்காலம் விரைவில் வருவதாகுக.

---

# குறிப்புகள்

**சிதம்பரத்தில் துறவியர் மகாநாடு**

சிதம்பரத்தில் மார்ச் 20, 21 ஆகிய இரு தேதிகளில், தில்லை நடராஜர் ஆலயத்தில் அமைந்துள்ள ஆயிரக்கால் மண்டபத்தில் துறவியர் மகாநாடு நடைபெற்றது. இது தமிழ்நாடு மாநிலம் தழுவிய அனைத்து மடத்துத் துறவிகளும் சமயத் தொண்டர்களும் கலந்துகொண்டு சில கருத்துக்களை ஆய்வு செய்யும் மாநாடாக அமைந்திருந்தது. இம்மாநாட்டில் தமிழ் நாட்டிலுள்ள சைவ, வைஷ்ணவ ஆதீன சன்னிதானத் தலைவர்கள், பல்வேறு சம்பிரதாய சந்நியாசிகள், புத்த பிட்சு உள்பட ஐம்பதிற்கு மேற்பட்டவர்கள் கலந்துகொண்டு உரையாற்றினர். தமிழ் நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் பலர் கருத்துக்களைச் செவிமடுக்க வந்திருந்தனர்; ஏற்பாடு விசுவ ஹிந்து பரிஷத்தாகும்.

மார்ச் 20ஆம் தேதி காலைக் கூட்டம் 10 மணிக்குத் தொடங்கியது. சில ஆதீனத் தலைவர்கள் "மக்களிடையே சமய நெறியைப் பரப்ப மேற்கொள்ள வேண்டிய முயற்சிகள்" என்னும் பொருள் பற்றித் தத்தம் கருத்துக்களைத் தெளிவாக எடுத்துரைத்தார்கள். காலைக் கூட்டம் பகல் 1-00 மணி அளவில் நிறைவுற்றது.

அன்றைய பிற்பகல் கூட்டம் 3-00 மணி அளவில் தொடங்கியது. கருத்தரங்கின் பொருளாக "சமய நெறியில் மக்களை நிலை நிறுத்துதல்" என்பதனைக்கொண்டு ஆய்வுரை செய்யப்பட்டது. தெரிவிக்கப்பட்ட கருத்துக்களாவன: (1) ஹிந்து மதத்தில், சமய தத்துவத்தில் பிழையேதுமில்லை; சமுதாயப் பழக்க வழக்கத்தில் உள்ள குறைபாடுகளைப் பெரிதுபடுத்தி, அவைகளை மதத்தின் குறைபாடு என்று கொள்ளலாகாது. (2) ஒவ்வொரு ஹிந்துவும் தான் ஹிந்து மதத்தைச் சார்ந்தவன் என்னும் ஆழ்ந்த மதாபிமானம் கொள்ளவேண்டும். தான் பிறந்த இப்பாரத பூமியினைத் தன் சொந்த புண்ணிய நாடு எனக் கருதித் தேசத்தின்பால் மிக்க நேசமுடையவனாக இருத்தல் வேண்டும். ஹிந்து மதத்தைச் சார்ந்த ஒவ்வொருவனையும் தன் சகோதரன் என்று உணரும் பாங்கை வளர்த்துக்கொள்ள வேண்டும். ஆக, தேசாபிமானம், மதாபிமானம் ஆகிய இரண்டையும் பெற்றிருப்பது மிக்க அவசியமாகும். (3) ஹிந்துமதக் கிரியைகளின் அடிப்படைத் தத்துவத்தைப் பரவலாக எல்லாரும் அறியும் வண்ணம் பிரச்சாரம் செய்யவேண்டும். இப்படிச் செய்வதால் நாத்திகர்களின் அபத்தப் பிரச்சாரம் தானாக ஒய்ந்துவிடும். (4) எல்லாத் துறவிகளும் தத்தம் பகுதி

களிலுள்ள பொதுமக்களோடு நேரிடையாக எளிய முறையில் தொடர்பு கொண்டு தத்துவ போதனை செய்யவேண்டும். அத்துடன் இயன்றவளவு சமூகத் தொண்டும் செய்வது அவசியம். (5) ஹிந்துக்களிடையே ஒற்றுமை உணர்வு ஓங்கினால், பரஸ்பரம் தம்மிடையே உதவிக்கொள்ளும் பாங்கு ஓங்கினால் பிற மதத்தவர்கள் ஹிந்துக்களை எதுவும் செய்துவிட முடியாது. (6) எந்த ஹிந்துமதத் துறவியும் நாத்திகர்களின் கூட்டங்களில் கலந்து உரையாற்றுவதோ ஆதரவு அளிப்பதோ கூடாது. அதேபோன்று கிறித்துவ, முகமதியர்களின் மாநாடு அல்லது கூட்டங்களில் கலந்துகொள்வதும் கூடாது. இத்தகைய செயல்கள் ஹிந்துக்களைப் பலவீனப்படுத்துகின்றன. எனவே பெருங்கேட்டைத் தவிர்க்க எல்லா ஹிந்து துறவிகளும் விவேகத்துடன் நடந்துகொள்ளவேண்டும். பிற்பகல் கூட்டம் மாலை 5-30 மணிக்கு முடிவுற்றது.

பிற்பகல் கூட்டம் முடிவுற்றதும் உடனடியாகத் தில்லைநடராஜர் ஆலயத்தின் நான்கு ரதவீதி வழியாக அனைவரும் கால்நடையாக ஊர்வலம் வந்தனர். ஊர்வலத்தில் பொதுமக்கள் ஆயிரக்கணக்கானோர் கலந்துகொண்டனர். இறைவனின் நாமத்தை ஊர்வலத்தினர் பக்தியோடு, உணர்ச்சியோடு ஓதியது கேட்டோரைப் புளகாங்கிதம் அடையச் செய்தது. ஊர்வலம் ஒரு மணி நேரத்தில் முடிவுற்றது.

அன்றிரவு 7-30 மணியளவில் பொதுக் கூட்டம் ஒன்று நடத்தப்பட்டது. துறவிகள், ஆன்றவிந்த சான்றோர்கள் உரையாற்றினர். இரவு கூட்டம் 12-00 மணிக்கு முடிவுற்றது.

21 ஆம் தேதி காலைக் கூட்டம் 9-00 மணியளவில் தொடங்கியது. "துறவும் தொண்டும்" என்ற பொருள் பற்றிக் கருத்தரங்கு நடைபெற்றது. வெளியிட்டப்பட்ட கருத்துக்களாவன: மடாதிபதிகள், தம் மடங்களில் மட்டுமே தொண்டிற்கு எல்லை கட்டிக்கொள்ளாது பொதுமக்களிடையே சென்று அவர்தம் குறைகளைக் கேட்டு ஆய்ந்து ஆவன செய்தல் தற்போது மிக அவசியமாகும். நரசேவை நாராயண சேவை ஆதலின், துறவிகள் இதில் எவ்விதத்திலும் தயக்கம் காட்டலாகாது. தம் மதிப்பு இதனால் குன்றும் எனக் கருதினால் தற்போது அமைந்துள்ள சூழ்நிலையில் பெற்றுள்ள மதிப்பும் போய்க் கேடுற நேரிடும். கிறித்துவப் பாதிரிகள் பாமர ஹிந்துக்களோடு நெருங்கிய தொடர்புகொண்டு தம் மதத்திற்கு ஈர்த்துக்கொள்கின்றனர். இக்கேடுதனை ஒழிக்கப் பரவலாக மடாதிபதிகள் எல்லா ஹிந்துக்களுடனும் தொடர்பு கொண்டு, மதபோதனை, மற்றும் ஹிந்துக்களைத் தாய் மதம் மாற்றுதல் ஆகியவைகளைச் செய்ய வேண்டும். காலைக் கூட்டம் நடுப்பகல் 12-30 மணிக்கு முடிவுற்றது.

பிற்பகல் கூட்டம் 2-30 மணிக்குத் தொடங்கியது. "அறநிலையங்களும் மக்களும்" என்ற தலைப்பின் கீழ் ஆய்வுரை செய்யப்பட்டது. வெளியிடப்பட்ட கருத்துக்களாவன: (1) நன்கு படித்த இளைஞர்கள் துறவியர்களாக வரவேண்டும்; ஆங்கில மொழியறிவும் அவர்கள் பெற்றிருக்கவேண்டும். (2) வெளி நாட்டில் வாழும் ஹிந்துக்களுக்குத் தத்துவ நூல்களோ, தத்துவ போதனையோ சரியானபடி கிடைக்காது திண்டாடுகிறார்கள். பயிற்சி பெற்ற துறவிகளை வெளி நாடுகளுக்கு அனுப்பி ஆவன செய்ய வேண்டும். (3) ஹிந்துக்கள் அறநிலையங்களோடு நெருங்கிய தொடர்பு கொள்ளவேண்டும். (4) மந்த்ர தீக்ஷை எல்லாருக்கும் வழங்கி மதத்தில் ஈடுபாடுகொள்ளச் செய்யவேண்டும்.

பிற்பகல் கூட்டம் மாலை 5-30 மணிக்கு முடிவுற்று மாநாடும் நிறைவுற்றது. இந்த இருநாள் மாநாட்டின் தீர்மானங்களின் சாராம்சம்: (1) மந்த்ர தீக்ஷை அனைவருக்கும் கொடுப்பதன் வாயிலாக ஹிந்து சாஸ்திரங்களில் தீண்டாமைக்கு அறவே இடமில்லை என்பதை உறுதி செய்கிறோம். (2) எல்லா மடாதிபதிகளும் துறவிகளும் கிராமப்புறங்களில் பாதயாத்திரை, சுற்றுப் பயணம் மேற்கொண்டு சமயப் பிரச்சாரம் செய்து ஹிந்துக்கள் சமயநெறியினின்று பிசகாதிருக்கத் தீவிரமுயற்சிகளை மேற்கொள்ள

வேண்டும். (3) ஹிந்துக்கள் எப்பகுதியிலாவது எவ்வகையிலாவது பாதிக்கப்பட்டால் உடனடியாக அனுதாபமும் ஆதரவும் துறவிகள் காட்ட முயல்வோமாக. (4) மத்திய மாநில அரசினர் உடனடியாக மதமாற்றத் தடைச்சட்டம் கொண்டுவர வேண்டும். (5) அரசு வினுக ஹிந்து அறநிலையங்களுக்கு இடையூறு விளைவிக்கின்றது. இதனை வன்மையாக இம்மாநாடு கண்டிக்கிறது. (6) புறச்சமயத் தாக்குதல்களுக்கு உள்ளான பல ஹிந்து கோயில்களைப் புனருத்தாரணம் செய்து ஹிந்துக்கள் வழிபடத்தக்கவைகளாக மாற்ற அரசை இம்மாநாடு வேண்டுகிறது. (7) நம்நாடு அடிமைப்பட்டிருந்த காலத்தில் பல்வேறு காரணங்களால் புறச் சமயங்களுக்குச் சென்றவர்களைத் தம் தாய் மதத்திற்குத் திருப்ப வேண்டுமென இம் மாநாடு விரும்புகிறது.

---

# செய்திகள்

**நிகழ்பவை :**

*16—4—83 அன்று சேலம் ஜில்லா சேந்தமங்கலத்தில் கன்னிகா பரமேஸ்வரி அம்மன் கல்யாண மண்டபத்திலும், 17—4—83 அன்று பெரியார் மாவட்டம், பவானியில் ஸ்ரீ ஐயப்பன் சேவா மிஷன் மண்டபத்திலும், ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள் ஒருநாள் அந்தர்யோகங்கள் நடாத்துவார்கள்.*

*21—4—83 வியாழக்கிழமை அன்று ஸ்ரீ ராம நவமியாகும். அன்று ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுல மாணவர்கள் பகல் பன்னிரண்டு மணி நேரம் அகண்ட நாமபஜனையும், மாலை 6-30 மணியிலிருந்து 7-30 மணி வரையில் ஐக்கிய வணக்கமும் செய்வார்கள்.*

*24—4—83 ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் 2 மணிக்குமேல் ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுல மாணவர்கள் கோடை விடுமுறைக்காக அவரவர் ஊருக்குப் புறப்படுவார்கள்.*

*திருவேடகம் விவேகானந்த கல்லூரியில் 22—5—83 முதல் 28—5—83 வரை உயர்நிலைப் பள்ளி, கல்லூரி ஆசிரியர்கள், ஆசிரியைகளுக்கு இந்து பண்பாட்டுப் பயிற்சி முகாம் நடைபெறும். கலந்துகொள்ள விரும்புபவர்கள் உணவுக் கட்டணம் மட்டும் ரூ. 30 செலுத்த வேண்டும். ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்களும் தபோவன மற்ற சாதுக்களும் முகாமில் பயிற்சி தருவார்கள். கலந்துகொள்ள விரும்புபவர்கள் முதல்வர், விவேகானந்த கல்லூரி, திருவேடகம் மேற்கு, மதுரை-624 217 என்ற விலாசத்திற்குத் தொடர்பு கொள்ள வேண்டும்.*

---



---

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
## இயற்றிய நூல்கள்

| | | |
|---|---|---|
| திருவாசகம் | பிரசார விலை ரூ. | 23-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை 14-ம் பதிப்பு | ,, ... | 18-00 |
| மஹாபாரதம் | ,, ... | 7-00 |
| இராமாயணம் | ,, ... | 5-00 |
| ஸ்ரீ தாயுமானசுவாமி பாடல்கள் | ,, ... | 6-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரீ | ,, ... | 5-50 |
| தினசரி தியானம் | ,, ... | 4-00 |
| கர்மயோக விளக்கம் | ... | 10-00 |
| பக்தியோக விளக்கம் | ... | 9-00 |
| ஞானயோக விளக்கம் | ... | 8-00 |
| ராஜயோக விளக்கம் | ... | 8-00 |
| பரமஹம்சரின் பெருமை | ... | 6-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... | 6-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... | 6-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—1 | ... | 5-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—2 | ... | 5-50 |
| விவேகானந்த விவரணம் | ... | 4-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் | ... | 3-50 |
| ஸ்ரீ சாரதாதேவியார் சரிதம் | ... | 3-00 |
| அனுஷ்டான வேதாந்தம் | ... | 3-00 |
| எதிர்கால இந்தியா | ... | 3-00 |
| திருக்கயிலாயகிரி யாத்திரை | ... | 3-00 |
| பஜனைப்பாடல்கள் | ... | 3-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | ... | 2-50 |
| தாயுமானவர் இயற்றிய | | |
| கருணாகரக் கடவுள் | விரிவுரை ... | 3-50 |
| பரிபூரணானந்தம் | ஷை ... | 3-00 |
| சின்மயானந்த குரு | ஷை ... | 3-00 |
| ஆனந்தமானபரம் | ஷை ... | 3-00 |
| சுகவாரி | ஷை ... | 3-00 |
| மௌனகுரு வணக்கம் | ஷை ... | 3-00 |
| எங்குநிறைகின்றபொருள் | ஷை ... | 2-50 |
| பரசிவ வணக்கம் | ஷை ... | 1-00 |
| கண்ணன் என்னும் கடவுள் | ... | 2-50 |
| ஹரிச்சந்திரன் | (நாடகம்) ... | 2-00 |
| பாதுகாபட்டாபிஷேகம் | ... | 1-75 |
| விரதவீரர் பீஷ்மர் | ஷை ... | 1-50 |
| விபீஷணன் சரணாகதி | ஷை ... | 1-50 |
| பரமஹம்சர் பாமாலை | ... | 1-50 |
| காயத்ரீ | ... | 1-50 |
| நன்மக்களைப் பெறுதல் | ... | 1-50 |
| அமரநாத யாத்திரை | ... | 1-25 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? | ... | 1-25 |
| இறைவணக்கம் | ... | 1-00 |
| குழந்தைகளின் களிக்கூடம் | ... | 1-00 |
| இராவண தத்துவம் | ... | 1-00 |
| வாலி மோட்சம் | (நாடகம்) ரூ. | 1-00 |

| | | |
|---|---|---|
| தவப்புதல்வர்கள் | (நாடகம்) ... | 1-00 |
| ஏகலைவ்யனின் குருபக்தி | (நாடகம்) ... | 1-00 |
| தானவீரன் கர்ணன் | (நாடகம்) ... | 1-00 |
| மார்க்கண்டேயன் | (நாடகம்) ... | 1-00 |
| பிரஹ்லாதன் | (நாடகம்) ... | 1-00 |
| தபோபலன் | (நாடகம்) ... | 1-00 |
| பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி கர்வபங்கம் | ... | 1-00 |
| இந்துமதமும் கிறிஸ்துவ மதமும் | ... | 1-00 |
| நோய்க்கு இடம் கொடேல் | ... | 1-00 |
| *ஆத்ம சக்தி | ... | 1-00 |
| சூரியநாராயணன் | ... | 0-75 |
| தெய்வீக மகிமைகள் | ... | 0-75 |
| *ஆலய வழிபாடு | ... | 0-75 |
| *சிவதத்துவம் | ... | 0-70 |
| *மனிதனது நிஜசொரூபம் | ... | 0-70 |
| தாயுமானவர் ஆலயத்தில் தத்துவ அமைப்பு | ... | 0-60 |
| நன்னெறிகளும் அருள்வாக்குகளும் | ... | 0-60 |
| *கணபதி | ... | 0-60 |
| *முருகக் கடவுள் | ... | 0-50 |
| விஷ்ணு தத்துவம் | ... | 0-50 |
| கர்மகாண்டம்எது?ஞானகாண்டம்எது? | | 0-50 |
| வர்ணாச்ரம தர்மம் | ... | 0-30 |
| அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் | ... | 0-30 |
| விவேகானந்தரின் வீர கர்ஜனை | ... | 0-30 |
| The Bhagavad Gita (11th Imp) | ... | 24.00 |
| Tirukkural ( with plastic cover ) | ... | 8-00 |
| The Indian National Education | ... | 8-00 |
| Ramakrishna Lives Vedanta | ... | 8-00 |
| The Bhagavad Gita (Small Size) | ... | 6-00 |
| Ramayana (with plastic cover) | ... | 7-00 |
| Mahabharata ,, | ... | 6-00 |
| Daily Divine Digest (DELUXE) | ... | 6-00 |
| Daily Divine Digest (Ordinary) | ... | 4-00 |
| Sri Krishna-The Manifest Divinity ,, | ... | 6-00 |
| Facets of Brahman or The Hindu Gods | ... | 5-00 |
| Sri Vishnu Sahasranama Stotram | ... | 4-00 |
| Siva Sahasranama Stotram | ... | 3-50 |
| Bheeshma The Superman | ... | 3-50 |
| Hinduism Hosts Christianity | ... | 3-00 |
| Holy Bible—In the Light of Vedanta | ... | 1-50 |
| Reminiscences of Master Mahashaya | ... | 1-50 |
| *Introducing the Gita | ... | 1-50 |
| The Garland of Paraaparam | ... | 1-50 |
| *Key to Higher Life | ... | 1-25 |
| *The Student | ... | 1-25 |
| TAT TVAM ASI *That Thou Art* IN Tayumana Swami | ... | 1-00 |

தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணத்திற்காக கீதை, திருவாசகத்திற்கு ரூ. 5-00ம், மஞ்ஜரீக்கு ரூ. 1-80ம் மஹாபாரதத்திற்கு ரூ. 1-80ம் இராமாயணத்திற்கு ரூ. 1-60ம் தினசரி தியானத்திற்கு ரூ. 1-40ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 3-00 முதல் ரூ. 5-00 வரையும் சேர்த்து அனுப்புங்கள். *இப்புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

# மாதேசுவரன்மலையில் அந்தர்யோகம்-6

1983ஆம் ஆண்டு மே மாதம் 10, 11 செவ்வாய், புதன் ஆகிய இரு தினங்களில் கீழ்க்கண்ட வாழ்க்கை முறைப்படி திருப்பராய்த்துறை, ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

## ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர் அவர்களால்

கர்நாடக மாநிலம் மாதேசுவரன் மலையில் அந்தர்யோகம் நடாத்தப்பெறும். பாலாறு செல்வதற்குச் சேலம் ஜில்லா மேட்டூர் தாலுகாவிற்கு அருகிலுள்ள கொளத்தூரிலிருந்து வேனோ லாரியோ கிடைக்கும். பாலாற்றிலிருந்து காலை 7-30க்கும், மாலை 2-30க்கும் மாதேசுவரன் மலைக்குப் பஸ் புறப்படு கிறது. மேலும் பஸ் வசதி விபரம் வேண்டுபவர்கள் சுவாமி சிதாபானந்த அவர்களுக்கு எழுதித் தெரிந்துகொள்ளவும். அந்தர்யோகத்தில் கலந்து கொள்ள விரும்புபவர்கள் சுவாமி சிதாபானந்த, ஸ்ரீ ராமகிருஷ்ண குரு குலம், சின்னத்தண்டா P. O., கொளத்தூர் (Via), சேலம் ஜில்லா என்னும் விலாசதாரரிடமோ, N. அன்னையன், சன்மார்க்க சங்கம், பேச்சேரி P. O, சேலம் ஜில்லா என்னும் விலாசதாரரிடமோ நபர் ஒன்றுக்கு ரூபாய் இருபது வீதம் M. O. மூலமோ நேரிலோ செலுத்திப் பதிவுசெய்து அனு மதிக் கார்டு பெற்றுக்கொண்டு மே மாதம் 9ஆம் தேதி மாலை 6-00 மணிக் குள் மாதேசுவரன் மலைக்குப் படுக்கை வசதியுடன் வந்து சேரவேண்டும். அந்தர்யோகத்தில் கலந்துகொள்ளாதவர்களுக்குத் தொகை வாபஸ் செய்ய இயலாது.

### வாழ்க்கை முறை

| காலை | மணிமுதல் | மணிவரை | மாலை | மணிமுதல் | மணிவரை |
|---|---|---|---|---|---|
| துயில் எழுந்திருத்தல் | 4-30 | | உணவு, ஓய்வு | 1-00 | 3-00 |
| நாம ஜபம் | 5-00 | 5-30 | உபந்யாசம் | 3-00 | 4-00 |
| ஆசனம், நீராடல் | 5-30 | 7-00 | வாசிப்பு | 4-00 | 4-30 |
| தியானம் | 7-00 | 7-45 | பானம், உலாவல், நீராடல் | 4-30 | 6-15 |
| சிற்றுண்டி | 7-45 | 8-45 | அர்ச்சனை | 6-15 | 7-15 |
| உபந்யாசம் | 8-45 | 9-45 | தியானம் | 7-15 | 7-45 |
| மௌனம் | 9-45 | 10-30 | உணவு | 7-45 | 8-45 |
| பஜனை | 10-30 | 11-15 | ஸத் ஸம்பாஷணை | 8-45 | 9-30 |
| ஆலயவழிபாடு, அர்ச்சனை, ஆரதி | 11-15 | 12-15 | நித்திரை | 9-30 | |

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Sankarananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.